ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்தி விழா

# ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை-639 115, எலமனூர் ரயில்வே ஸ்டேஷன், திருச்சிராப்பள்ளி Dt.

அன்புடையீர்,

ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்திவிழா 1983 மார்ச் மீ 20ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை மாலை 5-30 மணிமுதல் 8-30 மணிவரை இங்குக்கொண்டாடப்பெறும். நீங்கள் அனைவரும் அதில் கலந்துகொண்டு திருவருளுக்குப் பாத்திரமாவீர்களாக.

இங்ஙனம்,
**சித்பவானந்த**

**நிகழ்ச்சி முறை**

20—3—83 ஞாயிறு மாலை

*5-30 மணிமுதல் 7-00 மணிவரை*
குருகுல மாணுக்கர் ஆடல், பாடல், பேச்சு முதலியன
*7-00 மணிமுதல் 8-30 மணிவரை குருகுல மாணுக்கர்களால்*

**விரதவீரர் பீஷ்மர் என்னும் நாடகம்**

***தாய்மார்களுக்குத் தனி இடவசதி உண்டு. சிற்றுண்டிச்சாலை உண்டு.***

---

## திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத்தில் அந்தர்யோகம்

1983 ஆம் மார்ச் மாதம் 22, 23, 24 தேதிகளாகிய மூன்று தினங்களில் கீழ்க் கண்ட வாழ்க்கை முறைப்படி இங்கு அந்தர்யோகம் நடைபெறும். இதில் கலந்து கொள்ள விரும்பும் அன்பர்கள் மார்ச் மாதம் 21ஆம் தேதி இரவே நேரில் நாள் ஒன்றுக்கு ரூ. 7-00 வீதம் செலுத்திப் பெயர்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டும். தாய்மார்களுக்குத் தனி இடவசதி உண்டு. பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப் பட்ட சிறுவர்களும், கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும், நடைமுறை யைப் பின்பற்ற இயலாதவர்களும் இதில் சேர்த்துக்கொள்ளப்பட மாட்டார்கள்.

**வாழ்க்கை முறை**

**காலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| துயில் எழுந்திருத்தல் | 4-30 | |
| எல்லாரும் ஒன்றுகூடி நாமஜபம் | 5-00 | 5-30 |
| காவேரி ஸ்நானம் முதலியன | 5-30 | 6-30 |
| காலை தியானம் | 6-30 | 7-00 |
| சிற்றுண்டி | 7-00 | |
| காலை உபந்யாசம் | 8-30 | 9-30 |
| மௌனம் | 9-30 | 10-30 |
| பஜனை | 10-30 | 11-30 |
| அர்ச்சனை, பூஜை | 11-30 | 12-00 |

**மாலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| போஜனம், ஓய்வு | 12-00 | 2-30 |
| மாலை உபந்யாசம் | 2-30 | 3-30 |
| தனியாக வாசித்தல் | 3-30 | 4-30 |
| பானம், யோகாசனம், உலாவல், நீராடல் முதலியன | 4-30 | 6-00 |
| நாம ஜபம் | 6-00 | 6-15 |
| ஆரத்ரிகம், தியானம் | 6-15 | 7-00 |
| இரவு போஜனம் | 7-00 | |
| ஸத் ஸம்பாஷணை | 8-30 | 9-30 |
| நித்திரை | 10-00 | |

உபந்யாசங்கள் :— யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத் ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம்.

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 32 | துந்துபி ஞூ மாசி மீ | ஆரம் 2 |
|---|---|---|

பொருளடக்கம் — பக்கம்



## சந்தா விவரம்

**டிபாஸிட் சந்தா:** ரூ. 150 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்ம சக்கரம் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிக்கவேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட் செய்த ரூ. 150ஐயும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**ஆண்டு சந்தா:** ரூ. 15 செலுத்தியதுமுதல் அல்லது அடுத்த மாதம்முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் சந்தாதாரர்களுக்குக் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

**சகாய சந்தா:** மாத வருவாய் ரூ. 200 அல்லது ஆண்டு வருவாய் ரூ. 2400க்கும் குறைவாக இருந்து ஆண்டு சந்தா பதினைந்து செலுத்த இயலாது இருந்தால் ரூ. 10 அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவிநிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்விக விஷயமாதலால் ரூ. 15 செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

தமிழ் நாட்டிலும் பாண்டிச்சேரியிலும் உள்ள அரசாங்கப் பெ து நூலகங்கள் அனைத்துக்கும் தர்ம சக்கரம் அன்பர்களின் உதவியால் தொடர்ந்து அனுப்பப்பெறுகிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப்பெற்று படித்துப் பயனடையக்கோருகிறோம்.

உள்நாடு தனி இதழ் ரூ. 1-50 — வெளிநாடு தனி இதழ் ரூ. 3-00

**உள்நாடு வருட சந்தா ரூ. 15-00 — வெளிநாடு வருட சந்தா ரூ. 35-00**

## அந்தர்யோக விவரங்கள்

**இராமநாதபுரம் ஜில்லா—இராஜபாளையத்தில் 20—2—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: பழையபாளையம் பாரதி கல்யாண மண்டபம்*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

*உணவு வசதி: மதிய உணவுக்கு ரூ. 1-50 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

**கோவை ஜில்லா—அன்னூரில் 20—2—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமம்*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்*

**திருநெல்வேலி ஜில்லா—முக்காணியில் 20—2—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: ப. யூ. நடுநிலைப்பள்ளி*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி திவ்யானந்தர்*

**திருநெல்வேலி ஜில்லா—சங்கரன்கோவிலில் 27—2—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: சி. நா. ராமசாமி ராஜா மேல்நிலைப்பள்ளி, ஸ்ரீ கோமதிபுரம்*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-15 மணிவரை*

*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்*

*உணவுவசதி: மதிய உணவுக்கு ரூ. 3-00 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

**திருச்சி ஜில்லா—தாத்தையங்கார் பேட்டையில் 5—3—83 சனிக்கிழமை**

*இடம்: பிருந்தாவன கல்யாண மண்டபம்*

*நேரம்: மாலை 5-00 மணிமுதல் 7-30 மணிவரை*

*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

**கோவை ஜில்லா—சித்திரச்சாவடியில் 6—3—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த ஆச்ரமம்*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்*

*உணவு வசதி: பகல் உணவு ரூ. 1-50; மாலைச் சிற்றுண்டி ரூ. 1-00 நேரில் செலுத்தவும்.*

**சேலம் ஜில்லா—மேச்சேரியில் 6—3—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: சன்மார்க்க சங்கக் கட்டடம்*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

**திருநெல்வேலி ஜில்லா—கோவில்பட்டியில் 6—3—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: கடலையூர் ரோட்டில் அமைந்துள்ள திருமுருகன் பப்ளிக் ஸ்கூல்*

*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*

*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்*




# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

சக்கரம் 32 | துந்துபி ஹூ மாசி மீ | ஆரம் 2

## பிரார்த்தனை

ॐ नमोऽस्तु विष्णवे तुभ्यं नमस्तस्मै पुनः पुनः ।
यत्र सर्वं यतः सर्वं यः सर्वं सर्वसंश्रयः ॥

— विष्णु पुराणम्

ஓம் நமோ஽ஸ்து விஷ்ணவே துப்யம் நமஸ்தஸ்மை புன: புன: ।
யத்ர ஸர்வம் யத: ஸர்வம் ய: ஸர்வம் ஸர்வஸம்ச்ரய: ॥

— விஷ்ணு புராணம்

நாராயணு, உனக்கு நமஸ்காரம். அனைத்துக்கும் உறைவிட்மாகிய அவனைத் திரும்பத் திரும்ப வணங்குகிறேன். அனைத்தும் அவனிடத்திருந்தே தோன்றி வந்துள்ளன. அவனே அனைத்தும் ஆகிறான். அனைவருக்கும் அடைக்கலமாக இருப்பவனும் அவனே.

நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்
சீரார் சுடர்க ளிரண்டாய்ச் சிவனாய் அயனானாய்
கூராராழி வெண் சங்கேந்திக் கொடியேன் பால்
வாராய் ஒரு நாள் மண்ணும் விண்ணும் மகிழவே.

— திருவாய்மொழி

# அருள் விருந்து

பொறிபுலன்களை வென்றவனை மேலோர் எல்லாரும் பாராட்டுகின்றனர்.

பிரார்த்தனையில் ஈடுபடுதற்கு ஏற்பப் பண்பிலே மனிதன் மேலோங்குகிறான்.

அமைதியுடன் இருப்பவனுடைய பிரச்னைகள் தாமே அகன்று போகின்றன.

அகங்காரம் அகலுவதற்கேற்ப ஆத்மசாதகனுடைய அறிவு தெளிவடைகிறது.

அன்பே கடவுள்; அதற்கு நிகரான ஆதரவு மனிதனுக்கு வேறு ஏதும் இல்லை.

தன்னையே வெல்ல முயலுகிறவனைவிடப் பெரும் போர்வீரன் உலகில் இல்லை.

தீமை ஒன்றைச் சமயத்தின் பெயரால் ஆதரிப்பது சமய அனுஷ்டானம் ஆகாது.

இறைவா, உறுதிப்பாடே வடிவெடுத்தவனாக நான் ஆகும்படி அருள்புரிவாயாக.

அவரவருக்கு அமைந்துள்ள ஸ்வதர்மத்துக்கு நிகரான வாய்ப்பு வேறு ஏதும் இல்லை.

பிறரிடத்துக் குற்றங்காண்பதிலேயே காலத்தைப் போக்குபவன் தன்னிடத்தில் அக்குற்றங்களை வளர்க்கிறான்.

உபயோகப்படுத்தத் தெரியாதவனிடத்துப் பொருள் ஒன்று அமைவதும் அமையாது போவதும் ஒன்றேயாம்.

மேலோன் ஆவாய்; ஆனால் நீ மற்றவர்களுக்கு மேலோன் என்னும் செருக்கு உன் உள்ளத்தில் புக நீ இடந்தராதே.

தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்வதைப்பற்றிய எண்ணம் போனால் துயரமும் அத்துடன் அகன்றுபோகிறது.

விசுவாசத்துடனும் பொறுமையுடனும் இருப்பவனுக்குப் போதனை புறத்திலிருந்தோ அகத்திலிருந்தோ தானே வந்தமைகிறது.

நீர்க்குமிழி போன்று நிலையற்ற நிலவுலக வாழ்க்கையை நீடித்து வைத்திருக்க முயலுகிறவனுடைய அல்லலுக்கு எல்லையில்லை.

நல்ல செயலுக்கு இடைஞ்சல்கள் வருகின்றன. ஆயினும் தளரா ஊக்கத்துடன் முயலுபவன் தொடுத்த கருமத்தை இனிது நிறைவேற்றுகிறான். மன உறுதியையும் அவன் அடையப்பெற்றவனாகிறான்.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

1885 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 16ஆம் நாளன்று கல்கத்தா நகரிலே பலராம வஸுவினுடைய இல்லத்திலே முன் மண்டபத்தில் பக்தர்களின் கூட்டத்துடன் பரமஹம்சதேவர் அமர்ந்திருந்தார். மகேந்திரர் பிற்பகல் மூன்று மணிக்கு அங்கு வந்து சேர்ந்தார். கிரீஷ் சந்திரகோஷ், பலராம், இளைய ரவீந்திரன், பால்த்து, துவிஜன், பூரணன், மகேந்திரமுகர்ஜி ஆகியோர் ஆங்குக் கூடியிருந்தனர். பிரம்மசமாஜத்தைச் சேர்ந்த திரைலோக்ய ஸன்னியால், ஜெயகோபால சேனர் ஆகியவர்களும் மற்றும் சில அன்பர்களும் சிறிது நேரத்தில் அங்கு வந்து சேர்ந்தார்கள். பக்கத்திலுள்ள அறையில் பக்திமதிகளாகிய பெண்பாலர் சிலரும் கூடியிருந்தனர். அவர்களுள் மோகனனின் மனைவியும் ஒருத்தி ஆவாள். புத்திர சோகத்தால் அவள் கிட்டத்தட்ட பைத்தியம் பிடித்தவள் போன்று தென்பட்டாள். தௌர்பாக்கியத்திற்கும் துன்பத்திற்கும் ஆளாகியிருந்த வேறு பெண்பாலர் சிலரும் அங்கு வந்து சேர்ந்திருந்தார்கள். பரமஹம்சதேவரைச் சந்தித்து அவரிடமிருந்து ஆறுதல் பெறுதல் அங்ஙனம் அவர்கள் வந்ததன் நோக்கமாகும்.

பரமஹம்சதேவர் சில ஆண்டுகளுக்கு முன்பு தாம் புரிந்து வந்த சாதனங்களைப் பற்றிப் பக்தர்களுக்கு எடுத்து விளக்கி வந்தார். அதன் விளைவாக அவர் அடைந்திருந்த அனுபூதிகளைப் பற்றியும் அவர் விரிவாக எடுத்து விளக்கி வந்தார்.

பரமஹம்சதேவர்: ''நான் சாதனங்கள் புரிய ஆரம்பித்தபொழுது திரிசூலத்தைக் கையில் தாங்கிய மூர்த்தி ஒருவர் என் எதிரே அமர்ந்திருந்ததைக் கண்கூடாகக் காணலாயினேன். இறைவனுடைய தாமரைத் திருவடிகளிலே என் மனதை நாட்டாவிட்டால் தன் கையிலிருந்த திரிசூலத்தைக் கொண்டு என்னை அடிப்பதாக அம்மூர்த்தி பயமுறுத்தினார். என்னுடைய மனது இறைவனைவிட்டு வேறு எண்ணங்களில் நுழைந்தால் அத்திரிசூலத்தைக்கொண்டு என்னைக் குத்திவிடுவதாகவும் அவர் எச்சரிக்கை பண்ணினார்.

''அன்னை பராசக்தி இடையிடையே என்னைப் பரபோதத்தில் ஆழ்ந்திருக்கும்படி செய்தாள். அப்படித் தியானம் பண்ணியதற்கிடையில் என்னுடைய மனது சில வேளைகளில் பரம்பொருளிடத்திருந்து உலகவியவகாரங்களுக்குக் கீழே இறங்கி வரும். வேறு சில வேளைகளில் அம்மனது உலக வியவகாரங்களை ஒதுக்கித்தள்ளிவிட்டுப் பரபோதத்தில் ஆழ்ந்து மூழ்கும்.

''சில வேளைகளில் என் மனது உலக வியவகாரங்களில் உழன்றுகொண்டிருந்தபொழுது நான் சீதா பிராட்டியாரைக் குறித்தும் ராமபிரானைக் குறித்தும் ஆழ்ந்து தியானம் பண்ணிவந்தேன். அப்படி நான் பண்ணிக்கொண்டிருந்த நாட்களில் சீதாதேவியையும் ஸ்ரீ ராமனையும் அடிக்கடி தரிசிக்கும் பாக்கியம் எனக்கு வாய்த்தது. பாலராமனுடைய விக்கிரகம் ஒன்று என்னிடம் வைஷ்ணவ சான்றோர் ஒருவரால் தரப்பட்டிருந்தது. அந்த விக்கிரகத்தின் வாயிலாகப் பாலராமனை நான் ஆராதித்துவந்தேன். சில வேளைகளில் அத்தெய்விகக் குழந்தையை நான் நீராட்டுவேன்; வேறு சில வேளைகளில் அச்சிறுவனுக்கு அருந்துதற்குப் பண்டங்கள் வழங்குவேன்.

''மீண்டும் ராதாகிருஷ்ண தத்துவத்தைப் பற்றி நான் ஆழ்ந்து நினைத்ததுண்டு. அப்பொழுது அந்த இரண்டு மூர்த்திகளும் அடிக்கடி எனக்குக் காட்சி கொடுத்து வந்தார்கள். அதன் பிறகு கௌரங்க தேவரைப் பற்றி நான் ஆழ்ந்து தியானித்து வந்தேன். புருஷ தத்துவம், பிரகிருதி தத்துவம் ஆகிய இரண்டும் அவர்பால் சமரசம் பெற்றிருந்தன. அந்நாட்களில் நான் கௌரங்க தேவரை அடிக்கடி ஞானக்காட்சியில் கண்டுவந்தேன்.

"பிறகு என் மனப்பான்மையில் மாறுதல் ஒன்று உண்டாயிற்று. பரம்பொருள் லீலைகள் அல்லது சகுணமூர்த்தி உபாசனையினின்று என் மனது தானாகவே விலகிக் கொண்டது. அந்நிலையில் தூய்மைக்கு உறைவிடமாயிருந்த துளசி பத்ரத்துக்கும் சாதாரணமாயிருந்த தும்பைப் பத்ரத்துக்கும் இடையில் வித்தியாசம் ஏதும் எனக்குத் தென்படவில்லை. சகுணப் பிரம்மத்தின் வெவ்வேறு அம்சங்களாயிருந்த மூர்த்திகளின் தரிசனம் பெற்று மகிழ்வடையும் மனப்பான்மை என்னிடத்திருந்து அகன்று போயிற்று. அத்தகைய வடிவங்களுக்குப் போக்கும் வரவும் உண்டு என்பதை எனக்கு நானே இயம்பிக்கொண்டேன். இம் மூர்த்திகளையெல்லாம் தாண்டி அதீத நிலைக்கு என் மனது மேல்நோக்கிப் போவதாயிற்று. தட்சிணேசுவரத்தில் நான் வசித்து வந்த அறையிலிருந்த தேவதைகளின் படங்களை எல்லாம் அப்பொழுது அப்புறப்படுத்தி விட்டேன். அகண்ட சச்சிதானந்தத்தில் என்னுடைய ஜீவ வியக்தியை இழக்கும் பாங்கில் தியானம் பண்ணி வந்தேன்.

"நானாவிதமான சாதன முறைகளை நான் கையாண்டு வந்தேன். சாத்துவிக சாதனம், ராஜஸ சாதனம், தாமஸ சாதனம் ஆகிய மூன்று வகைப்பட்ட சாதனங்கள் இருக்கின்றன. சாத்துவிக சாதனத்தைக் கையாளும் சாதகன் ஒருவன் அருள்தாகம் பொருந்தியவனாகத் தென்படுகிறான். அல்லது அமைதியுடன் இறைவனுடைய நாமத்தை உச்சரித்து வருகிறான். தான் புரிகிற சாதனத்துக்குக் கைம்மாறு எதையும் அவன் எதிர் பார்ப்பதில்லை. ராஜஸ சாதனமுறையில் பலவிதப்பட்ட வழிகள் இருக்கின்றன. புரஸ்சரணம் அல்லது சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ள முறைப்படி வழிபாடு செய்வது, தீர்த்தயாத்திரை போதல், ஐம்பெரு வேள்விகள் வேட்டல், ஷோடச உபசாரத்துடன் பூஜைகள் பண்ணுதல் ஆகியவைகளை ஆடம்பரத்துடன் புரிந்துவருவது இதன் போக்கு ஆகும். தமோகுணத்தின் துணை கொண்டு சாதனங்கள் புரிவது மூன்றும் படித்தரத்தில் இருக்கிறது. இம்முறையைக் கையாளும் சாதகனிடத்து மூர்க்கத்தனம் சிறிது அமைந்திருக்கிறது. "ஓ தாயே! நீ என் காட்சிக்கு இலக்காவாயாக! இல்லையேல் நான் என் கழுத்தை அறுத்துக் கொண்டு வீழ்ந்து சாவேன்." இத்தகைய மனப்பான்மை தமோகுணம் படைத்துள்ள சாதகனுடைய போக்கு ஆகும். இம்முறையில் ஈடுபடுகிற சாதகன் சாஸ்திரத்தில் பகர்ந்துள்ள விதிகளைக் கையாள்வதில்லை. தந்த்ர சாஸ்திரம் அலாதியான போக்குடையது. அதில் பகரப்பட்டுள்ள முறைகள் தட்சண ஆசாரத்தின் போக்குடன் அடியோடு முரண்பட்டவையாகும். கிட்டத்தட்ட அந்தப்போக்கில் தமோகுணம் படைத்துள்ள சாதகன் தன் சாதனத்தில் ஈடுபட்டுவருகிறான்.

"ஆத்ம சாதனங்களில் ஈடுபட்டிருந்த பொழுது அதிசயிக்கத்தக்க பல காட்சிகளை நான் காணலாயினேன். ஜீவாத்மன் பரமாத்மனோடு பூண்டு வந்த இணக்கம் பிரத்தியட்சமாக என் கண்ணுக்குத் தென்பட்டது. முற்றிலும் என்னை ஒத்திருந்த மூர்த்தி ஒருவன் என் உள்ளத்தினுள்ளே புகுந்தான். அதன் பிறகு ஆறு ஆதாரங்களிலே ஒன்றன் பின் ஒன்றாக ஒவ்வோர் ஆதாரத்திலும் அவன் புகுவானாயினன். இந்த ஆதாரங்களின் மலர்கள் மூடியிருந்தன. கீழ்நோக்கித் தொங்கிக்கொண்டிருந்த ஒவ்வொரு மலரிலும் இந்த மூர்த்தி புகுந்தபொழுது அதன் பாங்கு மாறியமைந்தது. அதுகாறும் இதழ்கள் மூடப்பெற்றுத் தொங்கிக்கொண்டிருந்த ஒவ்வொரு புஷ்பமும் நிமிர்ந்திருந்து மலரலாயிற்று. இங்ஙனம் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரம், அனாஹதம், விசுத்தை, ஆக்ஞை ஆகிய ஆதாரங்கள் ஒன்றன்பின் ஒன்றாக மேல் நோக்கிப் பார்த்து மலர்ந்து வந்தன. இறுதியாக மலர்ந்தது சஹஸ்ராரம். இங்ஙனம் வாய்த்த ஆத்மானுபவங்களையெல்லாம் நான் கண்கூடாக உணரலானேன்.

"தியானம் பயின்றபொழுது நான் கையாண்ட முறை வருமாறு: காற்றில்லாத ஓரிடத்தில் வைக்கப்பெற்றுள்ள தீபம் ஒன்றின் ஒளிப்பிழம்பு அசையாதிருக்கிறது.

அத்தகைய ஒளிப்பிழம்பைத் தியானம் பண்ணியபொழுது என் மனதும் அசைவற்று அந்த ஒளிப்பிழம்பில் ஒன்றுபட்டிருந்தது.

''ஆழ்ந்து தியானம் பண்ணுகிறபொழுது சாதகன் ஒருவனுக்குப் புறவுலக உணர்ச்சி அறவே அகன்று போகிறது. வேடன் ஒருவன் பறவை ஒன்றின்மீது குறி வைத்துக் கொண்டிருந்தான். அவ்வேளையில் மணமக்கள் ஊர்வலம் ஒன்று அவ்வழியில் போய்க்கொண்டிருந்தது. ஆயினும் அந்த ஊர்வலமோ அதனால் விளைந்த ஆரவாரமோ வேடனைப் பாதிக்கவில்லை. அவன் பிடித்திருந்த இலக்கிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தான். அந்தப் பாங்கில் தியானம் அமைவது அவசியம்.

''குளக்கரை ஒன்றில் செம்படவன் ஒருவன் அமர்ந்து கொண்டு மீன் பிடிப்பதற்குத் தூண்டில் போட்டுக் கொண்டிருந்தான். நெடுநேரத்திற்குப் பிறகு தூண்டில் கயிற்றில் மாட்டப்பட்டிருந்த மிதவை அசைந்தது.இடையிடையே அந்த மிதவை நீரினுள் மறையும் பாங்கில் இருந்தது. செம்படவன் தூண்டில் கழியைத் தூக்க ஆயத்தப்படுத்தினன். அதே வேளையில் வழிப்போக்கன் ஒருவன் அங்கு வந்து 'பானர்ஜிபாபு வீட்டுக்கு வழி இதுவா?' என்று மூன்று நான்கு தடவை வினவினன். செம்படவனே அவன் கேட்டதைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. மனது ஆழ்ந்து ஒருமுகப்பட்டதன் அறிகுறி அதுவாகும். தியானம்பண்ணுகிறவனுக்கும் இத்தகைய மனநிலை தேவை.

''தியானத்தில் ஈடுபடுகிற ஒருவனுக்கு மன ஒருமைப்பாடு தானாக வந்தமைகிறது. அதன் விளைவாக அவன் கண்களுக்குப் புறத்தில் உள்ள காட்சிகள் தென்படமாட்டா. புறத்தினின்று வருகின்ற ஓசைகள் அவனுடைய காதில் விழமாட்டா. அவன் மீது பாம்பு ஒன்று ஊர்ந்து செல்லலாம். அப்படிப் பாம்பு தன் மீது ஊர்ந்து செல்வதைத் தியானத்தில் மூழ்கி இருப்பவன் அறிந்து கொள்வதில்லை. அந்தப் பாம்புக்கும் தான் ஊர்ந்து செல்லுவது ஒரு மனிதன் மீது என்கின்ற உணர்வு வருவதில்லை. ஆழ்ந்த தியானத்தின் பாங்குகள் இவை யாவுமாம்.

''ஆழ்ந்த தியானத்தில் சாதகன் ஈடுபடுகிறபொழுது ஐம்பொறிகள் செயலற்றுப் போகின்றன. மனம் புறத்தில் எதனிடத்தும் செல்லுவதில்லை. உள்ளமாகிய அது உள்ளத்தில் இருக்கும் ஒண்பொருளையே உன்னிக்கொண்டிருக்கிறது. வீடு ஒன்றின் புறத்திலுள்ள வாயில் கதவை மூடுதற்கு நிகராகும் அந்நிலை. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐம்புலன்களும் ஒடுங்கிக் கிடக்கின்றன.

''சாதகன் ஒருவன் தியானப்பயிற்சியில் ஈடுபடுகின்ற ஆரம்ப தசையில் புறத்திலுள்ள பொருள்கள் அவன் காட்சிக்கு எட்டுகின்றன. ஆனல் தியானம் முதிர்ந்து வருகின்றபொழுது அக்காட்சிகள் தாமாகவே மறைந்துபட்டுப் போகின்றன. தியானம் பயின்று வந்தபொழுது பலவிதமான அனுபவங்களை நான் பெறலானேன். கண்கூடாகப் பணக்குவியல் ஒன்றையும் அழகான சால்வை ஒன்றையும் அறுசுவையுடன் கூடிய தின்பண்டங்களையும் கட்டழகே வடிவெடுத்திருந்த மாதர் இருவரையும் நான் கண்டேன். அப்பொழுது ''ஓ மனமே! இவைகளுள் உனக்குத் தேவையானவை எவை?'' என்று கேட்டேன். ஆனல் என் மனமோ இவைகளுள் எதையும் நாடவில்லை. இவை யாவையும் வேண்டாம் என்று அறவே மறுத்தது. கடவுளின் தாமரைத் திருவடிகளைத் தவிர தனக்கு வேறு ஏதும் தேவையில்லை என்று என் மனது உறுதியுடன் இயம்பிற்று. மேலும் நான் கண்ட காட்சி வியப்புக்குரியதாகும். தியான அவஸ்தையிலே தென்பட்ட மாதர் இருவரின் உள்ளும் புறமும் என் காட்சிக்கு எட்டின. கண்ணுடிப் பெட்டியில் வைத்திருக்கும் பொருள் காட்சிக்கு எட்டுவதுபோன்று அன்னவர்களின் அமைப்பும் என் காட்சிக்கு எட்டியது. புறத்தில் கவர்ச்சிகரமான உடல் அமைப்பு; உட்புறத்திலோ சதை, எலும்பு, இரத்தம், நரம்பு, மலம், மூத்திரம் முதலியனவாம். விவேகத்துடன் கூடிய மனது பிரபஞ்சப்பொருள் எதிலும் நாட்டம் கொள்ளாதிருத்தல்வேண்டும்.''

---

# எந்நாள் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

8-17. ஜடத்துள்உயிர் போல்எமக்குத் தான் [உயிராய் ஞானம்
நடத்தும்முறை கண்டுபணி நாம்விடுவது [எந்நாளோ.

மின் விளக்கு, ஒலிபெருக்கி, மின் விசிறி ஆகியவைகளை இயக்குவது மின்சக்தி. இந்த மின் சக்தியை உண்டு பண்ணுவதற்கான மூல யந்திரம் ஒன்று இருக்கிறது. இவை யாவும் இயற்கையின் துணைகொண்டு மனிதனால் நிர்மாணிக்கப்பட்டவைகள். இவைகளுக்கு நிகராக இயற்கையின் அமைப்பும் வடிவெடுத்திருக்கிறது. நிலா வெளிச்சத்தைக்கொண்டு இரவிலே இயற்கையின் அழகைக் கண்டு ரசிக்கிறோம். அதைக் காண்பதற்கு நமக்கு முகாமையாயிருப்பது நிலா. இந்த நிலா ஒளிர்வது சொந்த வெளிச்சத்தைக்கொண்டு அன்று. சூரியப்பிரகாசம் சந்திரன்மீது படிகிறபொழுது அந்த வெளிச்சத்தைக்கொண்டு சந்திரன் பிரகாசிக்கிறது. இந்த இரண்டு உபமானங்களுக்கும் ஒப்ப மனிதன் அமைந்துள்ளான். பொருள்களைக் காண்பதற்கும் அவைகளை முறையாகப் பொருள்படுத்துதற்கும் ஏற்ற அறிவை மனிதன் படைத்திருக்கிறான். அங்ஙனம் அவன் படைத்திருக்கும் அறிவு சொந்த அறிவு ஆகாது. சந்திரன் சூரிய வெளிச்சத்தின் பிரகாசத்தைக்கொண்டு ஒளிர்வதற்கு நிகராக மனிதனுடைய உள்ளத்திலே வீற்றிருக்கும் பரமாத்மாவின் சன்னிதானத்தில் மனிதனுடைய அந்தக்கரணம் ஒளிர்கிறது. ஆதலால் மனிதனுடைய அறிவுக்கறிவாய் இருப்பது பரமாத்மன். அஞ்ஞானத்தில் உழலும் மனிதனுக்கு இந்தப் பரதத்துவம் விளங்குவதில்லை. தான் படைத்திருப்பது சொந்த அறிவு என்று எண்ணி அவன் இறுமாப்புக் கொள்கிறான். எங்ஙனம் மனிதனுடைய அறிவுக்கறிவாய் பரமாத்மன் இலங்குகின்றானோ அதேவிதத்தில் அவனுடைய செயலுக்கும் மூலகர்த்தாவாயிருப்பவன் பரமாத்மன். பிரபஞ்சம் எங்கும் நிகழ்ந்து வருகின்ற எல்லாவகைச் செயல்களும் ஈசனுடைய பஞ்ச கிருத்தியங்களில் அடங்கியிருக்கின்றன. அத் தத்துவத்தை அறிந்துகொள்ளாத அறிவிலியாகிய ஜீவாத்மன் தன்னுடைய செயலுக்குத் தானே கர்த்தா என்று அகங்கரிக்கிறான்.

'அவன் ஆட்டுவித்த பிரகாரம் நான் ஆடுகிறேன்' எனக் கருதுகிற அறிவாளிக்கும் தானே தன் செயலுக்குக் கர்த்தா என எண்ணுகிற அறிவிலிக்கும் இடையில் வித்தியாசம் ஒன்று உண்டு. இறைவனின் செயலுக்குக் கருவியாயிருப்பவன் ஆத்ம சாதகன். தன் செயலுக்குத் தானே கர்த்தா என உணர்கிறவன் அஞ்ஞானி. இதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வது அவசியம். பீஷ்மர் நிறைஞானி. ஜீவாத்மன் ஒருவன் பெறக்கூடிய எல்லாவிதமான ஆற்றல், பேரன்பு, பேரறிவு ஆகிய யாவும் அடையப்பெற்றவர் பீஷ்மர். அத்தகைய பாரமார்த்திகப் பெருநிலையை எட்டிய பீஷ்மரிடம் அகங்காரம் ஏதுமில்லை. தம்மிடத்துள்ள யாவையும் பிறர்க்குரியவைகள் என அர்ப்பணம் பண்ணியவர் அவர். ஆகவே, அகங்காரம், மமகாரம் இரண்டும் அறவே நீங்கப்பெற்ற பெருநிலையில் அவர் இருந்தார். அத்தகைய சான்றோரை அவருடைய பேரனாகிய துரியோதனன் அணுகி தான் தனது தாயாதிகளாகிய பாண்டவர்களோடு நடாத்தப் போகும் யுத்தத்தில் தனக்குச் சேனாபதியாக இருக்கவேண்டுமென்று வேண்டினான். அவரும் தாம் கொண்டிருந்த விரதத்தின்படி அக்கடனை நிறைவேற்றித் தருவதாக இசைந்தார். அதற்கிடையில் பேரனுக்கு எச்சரிக்கையொன்று செய்தார்: "நான் உனக்குச் சேனாபதியாக இருக்கிறேன். ஆனால் நீ தோற்றுப் போவாய்." அவர் தந்த எச்சரிக்கையைப் பேரன் அறிந்துகொள்ளவில்லை. அது அகங்காரத்தின் விளைவு. பிறகு போர்புரிந்தது பேரனுக்காக எனினும் பரமனுடைய கிருத்தியமே தம் மூலமாக நிகழ்ந்து வந்தது எனப் பீஷ்மர் நிறைஞானத்தில் ஊறி

யிருந்தார். போர்வீரர்கள் பலரைத் தாம் கொன்றதும் பிறகு யுத்தத்தில் தாமே தோல்வியடைந்ததும் கிருஷ்ணபரமாத்மாவின் அருள்திட்டப்படி நிறைவேறின என்று பீஷ்மர் கருதினர். ஆதலால் தம் செயலுக்குத் தாம் கர்த்தாவன்று என்னும் ஞான நிறைவில் அவர் நிலைபெற்றிருந்ததனுல் பாவமோ புண்ணியமோ அவரைத் தொட்டவில்லை. பரமாத்மாவிடம் கருவியாயிருந்து பரமனை அடைந்தது அவர் பெற்ற பெரிய பேறு ஆகும். பின்பு தம் செயலுக்குத் தாமே கர்த்தா என்று கருதிய துரியோதனனே தோல்வியடைந்து துயரத்துக்கு ஆளானுன்.

ஆத்மசாதகன் ஒருவன் தன் அறிவுக்கறிவாக இருப்பது பரமாத்மன் என்றும் தன் மூலம் நிறைவேறுகின்ற செயல்கள் யாவும் ஈசனுடைய செயல்கள் என்றும் கருதுபவன் உலக நடைமுறையிலுள்ள நலன் கேடுகளில் கட்டுப்படுவதில்லை. அத்தகைய பெருநிலை தமக்கும் வாய்க்கவேண்டும் என்று தாயுமான சுவாமிகள் இந்தக் கண்ணியின் வாயிலாகப் பரமாத்மாவிடம் விண்ணப்பிக்கிருர்.

**8-18. எக்கனும்ஆம் துன்ப இருள்கடலை விட்டுஅருள்ஆம்**
**மிக்ககரை ஏறி வெளிப்படுவது எந்நாளோ.**

இருள்கடல்-மாயப்பிரபஞ்சம். எக்கணும்-எவ்விடத்தும். இப்பிரபஞ்சம் வேறு, பரமாத்மா வேறு எனக் கருதுவது பிழை. பரமாத்மாவே இப்பிரபஞ்சமாக இலங்கிக் கொண்டிருக்கிருர். ஆதிபகவன் முதற்றே உலகு என்பது கோட்பாடு. இனி, ஐம்பொறிகளுக்கும் மனிதனுடைய அறிவுக்கும் இலக்காவது பிரபஞ்சம். ஐம்பொறிகளுக்கும் மனிதனுடைய அறிவிற்கும் எட்டாதிருப்பவர் பரமாத்மன். அறிவுக்கும் பொறிகளுக்கும் எட்டாத பரமாத்மன் பொறிகளுக்கும் அறிவுக்கும் எட்டுகிற பான்மையை எப்படி அமைத்தார் என்பது ஐயம். சான்று ஒன்றின் வாயிலாக இந்த ஐயத்தைத் தெளிவுபடுத்தலாம். சூரியக்கிரணம் வெட்டவெளியில் பாய்ந்துகொண்டிருக்கின்றபொழுது அது கட்புலனுவதில்லை. ஆனுல் அதே கிரணம் மேகத்தின் வாயிலாகப் பாய்கின்றபொழுது ஏழு நிறங்களாகச் சிதறடைந்து கட்புலனுகின்றது. இந்த ஏழு நிறங்களையே வானவில் என வைத்து நாம் கண்டு வருகிறேம். கட்புலனுகாத சூரியக் கிரணம் முப்பட்டைக் கண்ணுடியின் மூலமாகவும் ஏழு நிறங்களாகச் சிதறடைகிறது. அதே பாங்கில் மானுட அறிவுக்கும் பொறிகளுக்கும் கட்புலனுகாத பரமாத்ம சொரூபம் முக்குணமயமாக இலங்குகின்ற மாயா தத்துவத்தின் மூலம் பார்க்கின்றபொழுது அது பிரபஞ்சமாகக் காட்சி தருகின்றது. எனவே, பரமாத்மன் ஏக காலத்தில் கட்புலனுகாத பரவஸ்துவாகவும் கட்புலனுகின்ற பிரபஞ்சமாகவும் இலங்கிக் கொண்டிருக்கிருர். கவர்ச்சிகரமான இப்பிரபஞ்சக் காட்சியில் மற்ருெரு குறைநிலை உண்டு. ஜனன மரண மயமாகக் காட்சிதருவது பிரபஞ்சம். இன்ப துன்பமயமாகக் காட்சி தருவது பிரபஞ்சம். நலன் கேடாகக் காட்சி தருவது பிரபஞ்சம். பிரபஞ்சத்தின் கூறுகளாகிய இக்குறைநிலையை உள்ளபடி அறிந்துகொள்பவன் விவேகி. அத்தகைய விவேக உதயம் அடையப் பெற்றவனுக்குப் பற்றற்றநிலை (வைராக்கியம்) தானுகவே வந்தமைகிறது.

இவ்வுலகிலே பற்று வைக்கின்றவர்கள் பெரும் துன்பத்துக்கு ஆளாகிருர்கள். பற்றுதல் வலுத்திருப்பதற்கேற்பத் துன்பமும் அதிகம் உண்டாகின்றது. இவ்வுலகில் வாழ்ந்திருப்பதற்கிடையில் பற்று நீங்குதற்கேற்பத் துன்பம் குறைகிறது. பற்றற்று வாழ்ந்திருப்பவன் சேற்றிலே வாழ்ந்துவரும் சேற்று நீர் மீனேடு ஒப்பிடப்படுகிருன். சேறு முழுவதும் அழுக்கு மயம். அந்தச் சேற்றினுக்கு நிகர் இப்பிரபஞ்சம். சேற்றிலே தோன்றி சேற்றிலே வாழ்ந்து வளர்ந்து வருகிறதெனினும் அதன் மேனி சர்வகாலமும் பளபள என்று மின்னிக் கொண்டிருக்கிறது. இப்பிரபஞ்ச வாழ்வைப் பற்றற்ற நிலையிலிருந்துகொண்டு நன்கு பயன்படுத்திப் பரமாத்மாவுக்கும் தனக்கும் உள்ள இணக்கத்தை அறிபவன் துன்பம் கலவாத பேரின்பம் பெறுகிருன். அதை அடைய முயலுதலே மானுட ஜன்மத்தின் குறிக்கோள் என்பது இக்கண்ணியின் உட்கருத்து.

# பாமரமக்களை உயர்த்துவோம்

( சுவாமி விவேகானந்தர் )

நம் நாட்டில் குடிசைவாழ் மக்கள்தான் அதிகம். ஆனால் அந்தோ! அவர்களுக்காக நாம் என்ன செய்கின்றோம்? விதவைகளை மறுமணம்செய்துகொள்வதால் தேசத்துக்கு விமோசனம் வந்துவிடாது. பாமரமக்கள் உயர்ந்தால்தான் தேசத்துக்கு விமோசனம் வரும். அவர்களை உயர்த்துவதற்கு நாம் என்ன செய்யமுடியும்? அவர்கள் இன்று அவர்களுக்கே உரிய இயல்பை இழந்திருக்கின்றார்கள். அவர்களிடம் தன்னம்பிக்கை இல்லை. அவர்களிடத்திலுள்ள ஆன்மீக இயல்பைக் கெடுக்காதபடி அவர்களிடத்துத் தன்னம்பிக்கையை நாம் வளர்க்கவேண்டும். அவர்கள் இழந்துவிட்ட இயல்பை மீண்டும் அவர்களுக்கு உரியதாக்கவேண்டும். இதைச் செய்தே ஆகவேண்டும். நாம் இதைச் செய்துமுடிப்போம்.

மக்களுடைய கூட்டமே நாடு என்பதாகும். ஒவ்வொருவரையும் முன்னுக்குக் கொண்டுவருவதற்கேற்ற பயிற்சியை ஒவ்வொருவருக்கும் தரவேண்டும். இதுதான் என்னுடைய ஆசை. நம்மை நாம்தாம் ஒழுங்குபடுத்தியாக வேண்டும். நம்மை ஒழுங்குபடுத்துகின்ற செயலைத்தான் நாம் செய்யமுடியும். ஒவ்வொரு மனிதனும் நல்லவனாகவும், தூயவனாகவும் இருந்தால் தான் நாடு நல்லதாகவும் தூயதாகவும் ஆக முடியும். நாடு நலம் அடைய நாம் நல்லவர்களாக ஆகவேண்டும். எனவே நம்மை நாம் தூய்மைப்படுத்திக் கொள்வோமாக. நம்மை நாம் பூரணர்களாக்கிக்கொள்வோமாக. பாமரமக்களிடையே எழுச்சியும், பெண்களிடையே உயர்வும் முதலில் ஏற்பட வேண்டும். அப்பொழுதுதான் பாரததேசமாகிய நம் நாட்டுக்கு உண்மையான நலம் உண்டாகும்.

சீர்திருத்தக்காரர்களுக்கு நான் ஒன்று கூற விரும்புகின்றேன். உங்கள் யாவரையும்விட நான் ஒரு பெரிய சீர்திருத்தக்காரன். நீங்கள் சிறிய சீர்திருத்தம் செய்ய விரும்புகிறீர்கள். நான் விரும்பும் சீர்திருத்தமோ மிகப் பெரியதாகும். சமுதாயம் என்ற மரத்தை ஆணிவேர் முதல் உச்சிக்கிளைவரையிலும் சீர்திருத்தி அமைக்க விரும்புகின்றேன். உங்களுக்கும் எனக்கும் சீர்திருத்தத்தைக் கையாளும் முறையில் வேற்றுமை உள்ளது. உங்களுடைய சீர்திருத்தமுறை மேல் நிலையில் உள்ளவர்களைப் பாதிக்கின்ற முறையில் அமைந்து இருக்கிறது. என்னுடைய சீர்திருத்தமுறையோ யாவரையும் உயர்த்துகின்ற முறையில் அமைந்திருக்கின்றது. சீர்திருத்தம் என்று நான் சொல்லிக்கொள்ள விரும்பவில்லை. சமுதாய வளர்ச்சி என்றே நான் கூற விரும்புகின்றேன். என்னைக் கடவுள் நிலையில் வைத்துக்கொண்டு யாருக்கும் நான் உத்தரவிட விரும்பவில்லை. "நீ இந்த வழியில்தான் செல்லவேண்டும். நீ இந்த வழியைப் பின்பற்றக்கூடாது" என்று யாருக்கும் கட்டளையிட நான் விரும்பவில்லை. இராமன் கடலில் அணை கட்டுவதற்குச் சிறு அணிலும் உதவியது. அவ்வணில் இராம காரியத்தில் தன்னுடைய பங்கைச் செய்வதில் திருப்தி அடைந்திருந்தது. சிறு அளவு மணலைத் தன் சிறிய உடலில் சுமந்துகொண்டு வந்து அவ்வணைக்குப் போடுவதில் மகிழ்ச்சியடைந்தது. அவ்வணில் போன்று என்னால் இயன்ற அளவு தாய் நாட்டுக்குச் சேவை செய்ய விரும்புகின்றேன்.

நம்நாடு என்னும் இயந்திரம் நீண்டகாலம் வேலை செய்துகொண்டிருக்கிறது. தேசிய வாழ்க்கை என்னும் நதி நீண்ட காலமாக ஓடிக்கொண்டிருக்கிறது. எரியும் நெருப்புக்கு விறகிடுவதுபோன்று நாம் நாட்டின் முன்னேற்றத்துக்குவேண்டிய நல்லகாரியங்களைச் செய்துகொண்டிருக்க வேண்டும். முன்னேற்றம் தானாக வந்தமையும். இப்படித்தான் முன்னேற வேண்டுமென்று யாரும் ஆணையிடவேண்டியதில்லை. அமைதியான முறையில் நற்செயல்களைச் செய்துகொண்டே இருக்கவேண்டும். நல்லெண்ணமும், நல்லுணர்வும் உடையவர்களாக இருந்து பாமர மக்களை உயர்த்த உழைத்து வருவோமாக.

# எழுமின், விழிமின், இறுதிவரை உழைமின்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1978 ஆம் ஆண்டில் சேலம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

(16ஆம் பக்கத் தொடர்ச்சி)

இராவணனுக்கும் சீதைக்கும் இடையில் நடந்த சம்பாஷணையை அனுமான் மறைந்திருந்து கேட்டான். இராவணன் இல்லாத பொழுது அனுமான் தன்னைச் சீதைக்கு அறிமுகப்படுத்திக்கொண்டு சீதையிடம் பகர்ந்ததாவது: "தாயே! மரக்கட்டை ஒன்றில் உட்காருங்கள். நான் நொடிப்பொழுதில் உங்களை இராமனிடம் கொண்டு போய்ச் சேர்த்துவிடுகிறேன்." இராமன்பிரிவைத்தாங்கமுடியாது அழுது கொண்டிருந்த சீதை அனுமானிடம் பகர்ந்ததாவது: "ஓர் அரக்கன் என்னைத் திருடிக்கொண்டு வந்துவிட்டான். நீ என்னை எடுத்துக்கொண்டு போவாயாகில் ராமனும் திருடிக்கொண்டு போய்விட்டான் என்ற அவப்பெயர் வந்துவிடும். அப்பெயர் அவனுக்கு வரக்கூடாது. நேர்மையானமுறையில் படையெடுத்து வந்து இராவணனுக்குத் தரவேண்டிய தண்டனையைத் தந்து இராமன் என்னை மீட்டுக்கொண்டு போக வேண்டும். திருட்டுத்தனமாக என்னை இராமன் எடுத்துக் கொண்டு செல்லக்கூடாது. பாரமார்த்திக நெறியில் நிற்பவர்கள் தர்மத்தை விட்டு ஒருநாளும் பிசகமாட்டார்கள்."

ஆஞ்சநேயன் சீதையின் கருத்தைப் பாராட்டினான். சீதையைக் கண்டு பிடிக்கும் வேலை அனுமானுக்கு முடிந்தது. அனுமான் தனக்குத்தானே யோசித்தான். எதிரியின் பலத்தை அறிந்துகொண்டு போக வேண்டுமென்று முடிவுசெய்தான். தன்னை இராவணன் முன்கொண்டு போய் நிறுத்துவதற்கு ஒருமுறையைக் கையாண்டான். இராவணனுக்குவிருப்பமான அசோகவனத்தை அழித்தால் தன்னை இராவணன் முன் இழுத்துச் செல்வார்கள் என்று திட்டமிட்டான். அத்திட்டத்திற்கேற்ற செயலில் இறங்கினான். அசோகவனத்தில் இருந்த மரங்களையெல்லாம் வேரோடு பெயர்த்துத் தள்ளினான். அனுமான் அசோகவனத்தில் செய்த அட்டகாசத்தைப் பார்த்தவர்கள் இராவணனிடம் சென்று அனுமானுடைய அழிவுச் செயலைக் குறித்துமுறையிட்டார்கள். "அப்படி அட்டகாசம் செய்கின்ற அனுமானைப் பிடித்துக் கட்டிஅரண்மனைக்குக் கொண்டு வாருங்கள்" என்று இராவணன் உத்தரவு போட்டான். இராவணனுடைய உத்தரவை நிறைவேற்ற அனுமானைப் பிடித்துக்கட்டினார்கள். பிராணயாம முறையில் மூச்சை உள்ளே இழுத்து உடலைப் பெரிதாக்கினான் அனுமான். இராவணனுடைய ஆட்கள் அனுமானுடைய உடலைக் கயிற்றினால் இறுகக்கட்டி இராவணன் முன் கொண்டுபோய் நிறுத்தினார்கள். இராவணன் முன் சென்றதும் மூச்சை வெளியே விட்டு உடலைப் பழைய நிலைக்குச் சிறியதாக்கினான். கட்டெல்லாம் அவிழ்ந்து கயிறு கீழே விழுந்தது. அனுமானை யாரென்று விசாரியுங்கள் என்று இராவணன் உத்தரவு போட்டான். அப்பொழுது அனுமான்பகர்ந்ததாவது: "இலங்கேசா! நான் ஒரு வார்த்தை என்னைப் பற்றிக் கூறுகின்றேன். நான் சொல்லி முடியும் வரையில் நீ கோபித்துக் கொள்ளக்கூடாது. நான் சொல்லி முடித்த உடன் நீ என்ன வேண்டுமென்றாலும் செய்துகொள். இரண்டாவது அம்பு எடுப்பதற்கு அவசியமில்லாமல் ஓர் அம்பில் வாலியை அழித்த இராமனுடைய தூதுவர்களுள் நான் ஒருவன்" என்று கூறித்தன்னை அறிமுகப்படுத்தினான். வாலி என்ற சொல்லைக் கேட்டவுடன் இராவணன் நடுங்கியதை அனுமன் பார்த்தான். எதிரியின் பலம் எத்தகையது என்பதை ஆஞ்சநேயன் இப்பொழுது அறிந்துகொண்டான். ஆஞ்சநேயன் இராவணனுக்குக் கூறியதாவது: "இராவணா! இராமன் உன்னைக் கொல்லத் தீர்மானித்துள்ளான். நீ உயிர் பிழைக்க வேண்டுமென்றால் ஒரு வழி உண்டு. நீ சீதையை எடுத்துக்கொண்டுபோய் இராமனிடம் ஒப்படைத்து விட்டு அவனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள். இராமன் உன்னை மன்னிப்பான். நீ அப்படிச் செய்யாவிடில் இராமனுடைய அம்புக்கு நீ இரையாவாய்."

அனுமன் கூறியதைக் கேட்டதும் இராவணன் கோபாவேசமானுன். சிந்தித்துப் பார்க்காது இராவணன் அனுமான் வாலில் தீவைத்துக கொளுத்தும்படி கட்டளையிட்டான். அனுமான் இலங்கையின்பெரும் பகுதியைத் திக்கிரையாக்கினுன். இராவணன் காமநோயினுல் பிடிக்கப்பட்டுப் பல சமயங்களில் தவறுகள் செய்தான். ஆனுல் அனுமான் எந்த நிலையிலும் தவறு செய்யவில்லை. அருள் தாகம் படைத்திருந்த அனுமான் எந்தச் செயலில் ஈடுபட்டாலும் அந்தச் செயல் மூலம் தன்னிடத்திலுள்ள ஆற்றலையும் அறிவையும் வளர்த்தான். அறிவு படைத்தவர்களும் அருள்தாகம் படைத்தவர்களும் யாண்டும் சன்மார்க்கத்திலேயே நிலைநிற்பவர்களாகிருர்கள்.

எழுமின், விழிமின், நாடிய கருமம் கைகூடும் வரை உழைமின் என்பது நம் அனைவருக்கும் ஒரு சிறந்த செய்தியாகும். சீதா பிராட்டி இராமன் சிந்தனையிலேயே விழிப்புடன் இருந்தாள். இராவணனுடைய மயக்கத்துக்கு அவள் தன்னை உட்படுத்திக் கொள்ளவில்லை. ஆஞ்சநேயன் சீதையைக் காணும் காரியம் கைகூடும்வரை உழைத்து வந்தான். இராமன் படையெடுத்துச்சென்று இலங்கேசனை ஒழிக்கும்வரை அயராது உழைத்து வந்தான்.

இராமன் இராவணனைஅழித்துவிட்டு இலங்கைக்கு விபீஷணனை அரசனுக்கினுன். சீதையைத் திருப்பி ஏற்றுக்கொள்வதற்கு முன்பு இராமன் பகர்ந்ததாவது: ''பிறன் மனைவியைத் தூக்கிச்சென்ற இராவணனுக்கு நான் மரண தண்டனை கொடுத்துவிட்டேன். சீதா தேவியே! நீ வேற்ருன் வீட்டில் பத்து மாதம் இருந்தாய். இனி உனக்கும் எனக்கும் தொடர்பு இல்லை. நீ எப்படி வேண்டுமென்ருலும் நடந்துகொள்ளலாம்.'' சீதைக் காகக் கதறிப்பதறி அழுத இராமன் தனக்கும் சீதைக்கும் தொடர்பு இல்லை என்று கூறினுன். அப்பொழுது சீதாபிராட்டியின் தரம் வெளியாயிற்று. சீதை பகர்ந்ததாவது: ''இராமா! இது உன்னுடைய தீர்மானம் என்ருல் இத்தனை பேர் சிரமப்பட்டிருக்க வேண்டியதில்லை. உனக்கும் எனக்கும் தொடர்பில்லை என்று ஒரு வார்த்தை நீ அனுமானிடம் சொல்லி அனுப்பியிருந்தால் நான் செய்யவேண்டியதைச் செய்திருப்பேன். அந்த இராவணனுகிய துரும்பை என் கற்பினுல் எரித்துச் சாம்பலாக்கியிருப்பேன். இராவணனை அழிப்பது நீ செய்யும் செயல் என்று எண்ணி நான் அடக்கமாக இருந்தேன். உனக்குரிய நான் என் இச்சைப்படி ஒன்றும் செய்துவிடக்கூடாது என்று சும்மாயிருந்தேன். உலகம் தெரிய உனக்கும் எனக்கும் தொடர்பில்லை என்று இப்பொழுது நீ கூறிவிட்டாய். நான் இப்பொழுது எனக்குச் சொந்தமாகின்றேன். நான் என்னுடைய திறமையைக் காட்டுகின்றேன். இலட்சுமணு! நீ தீ மூட்டு. நான் என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்கின்றேன்.'' இலட்சுமணன் அதைக்கேட்டதும் இராமன் முகத்தைப் பார்த்துத் திகைத்து நின்ருன். இராமன் அமைதியாக இருந்து நெருப்புமூட்ட இலட்சுமணனுக்கு அனுமதி தந்தான்.

சீதை இராமனிடம் கூறிய சபதமாவது: ''இராமா! நான் உனக்காக உயிர் வைத்திருந்தேன். உயிரின்மீது எனக்குப் பற்றுதல் இல்லை. நான் ஒருவிதத்தில் வெற்றியடைந்துள்ளேன். அடாத செயல் செய்துவந்த இராவணன்இராமனுல் ஒழிக்கப்படவேண்டுமென்று இருந்தேன். அக்காரியம் நிறைவேறிவிட்டது. இராமன் எனக்குச்சொந்தம். நான் இச்சரீரத்தை இராமனுக்காக வைத்திருந்தேன். எனக்கு இச்சரீரம் வேண்டியதில்லை. இந்தச் சரீரத்தை அக்கினி தேவதைக்குக் கொடுக்கப் போகின்றேன்.'' இங்ஙனம் கூறிச் சீதை அக்கினியில் பிரவேசித்தாள். அக்கினி பகவான் இப்புனிதமான உடலைத் தாம் தகிக்கமுடியாதென்று சீதையை அப்படியே கொண்டுவந்து ஒப்படைத்தார். சீதை புனிதத்தன்மையில் உச்சநிலைக்கு வந்துவிட்டாள். சீதை பேராற்றலின் உச்சநிலையில் இருந்தாள்.

அயோத்திக்கு வந்தானபிறகு கிரகஸ்த ஆச்ரமத்தில் இராமனும் சீதையும் ஈடுபட்டார்கள். இராமன் அரசன் என்ற முறையில் ஒரு கடமையைச் செய்தான். அரசன் குடி

மக்களுக்கு முன்மாதிரியாக இல்லையென்று இராமன்மீது குற்றம் சாட்டப்பட்டது. அன்னியன் வீட்டில் இருந்த சீதையை அவன் தன்னிடம் வைத்துக்கொண்டான் என்பது அக்குற்றச்சாட்டு ஆகும். சீதை கற்புடையவள் என்று தான் மக்களுக்கு எடுத்துக்கூறமுடியாது. எனவே கர்ப்பிணியாக இருந்த சீதையை இலட்சுமணன் மூலம் காட்டுக்கு அனுப்பிவைத்து விடுகின்றான். இலட்சுமணன்சீதையைக் காட்டுக்கு அழைத்துச்சென்று இராமன் தங்களைப் புறக்கணித்து விட்டானென்று சீதையிடம்கூறி அவளை அங்கேயே விட்டுவிட்டு வந்துவிடுகின்றான். தன்னந்தனியாக இருந்த சீதை கதறி அழுதாள். ஆனால் தன்பேராற்றலை அவள் ஞாபகப்படுத்திக்கொண்டாள். அவள் தனக்குத் தானே சிந்தித்துக் கொண்டதாவது: "இராவணன் என்னைத் தூக்கிக்கொண்டு போனபொழுது என்னை மாய்த்துக்கொள்வதற்கு நான் சுதந்தரமற்றவளாக இருந்தேன். நான்அப்பொழுது இராமனுக்கு உரியவளாக இருந்தேன். இராமன் இப்பொழுது என்னைப் புறக்கணித்துவிட்டாலும் அவனுடைய சொரூபத்தை என் கர்ப்பத்தில் பிரதிஷ்டை செய்துள்ளான். அதற்குப் பங்கம் விளைவிக்க எனக்கு உரிமை இல்லை. அதைப்பாதுகாத்து அவனிடம் ஒப்படைக்க வேண்டும்." இங்ஙனம் எண்ணிப் புலம்பிக்கொண்டிருந்தபொழுது வால்மீகி மகரிஷி ஆங்கு வந்தார்.

வால்மீகி மகரிஷியிடம் அவள் கேட்டதாவது: "மகரிஷியே! இராமன் தர்மவான் என்று கூறுகிறீர்கள். இப்பொழுதுள்ள நிலையில் என்னை வனவாசத்தில் கொண்டு வந்து விடுவது தர்மமாகுமா?" வால்மீகி மகரிஷி அதற்குப் பதில் கூறியதாவது: "மகளே! இராமன் ஒருநாளும் தர்மத்தை விட்டுப் பிசகமாட்டான். தர்மம் வேறு இராமன் வேறு இல்லை. கர்ப்பிணியாகிய உன்னைக் காட்டில் கொண்டுவந்து விட்டது அதர்மம் போன்று தென்படலாம். இச்செயல் உன்னுடைய தரத்தை விளக்குகிறது. நீ பரிசுத்தமானவள். உனக்கு யாரும் தீங்கு விளைவிக்கமுடியாது. உனக்கு வேண்டிய உதவி அவ்வப்பொழுது வரும். நீ அயோத்தியில் இருந்தால் ராஜரீதியோடு வாழ்வாய். உன்னுடைய மனநிலைக்கு ஏற்றவாறு உனக்குப் பிறக்கும் மக்கள் ராஜரீதியோடு இருப்பார்கள். வனத்தில் ஆச்ரம வாழ்க்கை வாழ்ந்து தவம் செய்து வருவாயானால் தவக்குழந்தைகள் பிறப்பார்கள். ராஜரீதியைவிடத் தவமே சிறந்ததாகும். எனவே இராமன் ஓர் உயர்ந்த நோக்கத்துடன்தான் உன்னை இங்கு அனுப்பிவைத்திருக்கின்றான். நீ இங்கு ஆஸ்ரம வாழ்க்கை வாழ்ந்து தவத்தில் ஈடுபடுவதற்கு என்னுடைய ஆஸ்ரமத்திற்கு வந்து தங்கியிருக்கலாம்." சீதையின் தவ வாழ்வின் விளைவாகத் தவக் குழந்தைகள் சீதைக்குப் பிறந்தார்கள். சீதையின் குழந்தைகள் இராமனைவிடப் பெரிய நிலையில் இருந்தார்கள். இராமனும் சீதையும் தவம் இருந்த செயல் கணவனும் மனைவியும் மகப்பேறு பெறுவதற்கு எத்தகைய தவம் செய்யவேண்டுமென்பதை விளக்கிக் காட்டுகின்றது.

வால்மீகி மகரிஷி சீதையின் குழந்தைகளுக்கு இராமாயணத்தைப் புகட்டினார். அவர்கள் மகரிஷி புகட்டிய இராமாயணத்தை அற்புதமாகப் பாடினார்கள். இராமாயணத்துக்குக் கதாநாயகனாக இருந்த இராமன் தான் தங்கள் தந்தை என்பதை அவர்கள் அறியாதவர்களாக இருந்தார்கள். குழந்தைகளைத் தாய் தந்தையர் யாரென்று காட்டித் தராது அனாதைகளாக வளர்க்கவேண்டிய சோதனைதான் சீதைக்குப் பெரிய சோதனையாக இருந்தது. இலங்காபுரியிலிருந்ததும் காட்டுக்கு அனுப்பப்பட்டதும் சீதைக்குப் பெரிய சோதனைகளாகத் தென்படவில்லை. குழந்தைகளை அனாதைகள் போன்று வளர்ப்பதுதான் அவளுக்குப் பெருஞ் சோதனையாக இருந்தது.

குழந்தைகள் இருவரும் இராமனுடைய மகிமைகளை அற்புதமாகப் பாடினார்கள். ஆனால் இராமன்தான் தங்கள் தந்தை என்று சொல்ல அவர்களுக்கு உரிமையில்லை. சீதாபிராட்டியின் பெருமையை அருமையாகப் பாடினார்கள். ஆனால் சீதாபிராட்டிதான் தாய் என்று அவர்களுக்குத் தெரி

யாது. அயோத்திக்கு அவர்கள் இருவரும் அழைத்துச் செல்லப்பட்டார்கள். ஆங்கு இராமன் முன்னிலையில் இராமனுடைய மகிமையைஅற்புதமாகப் பாடினர்கள். இராமன் ''நீங்கள் யார்?'' என்று அவர்களைக் கேட்டான். ''நாங்கள் வால்மீகி மகரிஷியின் ஆஸ்ரமவாசிகள்'' என்று விடை கொடுத்தார்கள். ''உங்களுக்குத் தந்தை யார்?'' என்று இராமன் கேட்டான். ''வால்மீகி மகரிஷிதான் எங்கள் வளர்ப்புத் தந்தை ஆவார்'' என்று கூறினர்கள். ''உங்களுக்குத் தாய் இருக்கின்ருளா?'' என்று இராமன் கேட்டான். ''தாய் இருக்கின்ருள்'' என்று அவர்கள் பதில் கூறினர்கள். ''உங்களுடைய தாயின் பெயர் என்ன?'' என்று இராமன் கேட்டான். ''தாய்தான்'' என்று பதில் கொடுத்தார்கள். ''உங்கள் மகரிஷியை இங்கு அழைத்து வருகிறீர்களா?'' என்று கேட்டான். ''மகரிஷி இருக்குமிடத்துக்கு நீங்கள் வரவேண்டும். அவர் ஏன் இங்கு வரவேண்டும்?'' என்ருர்கள். அவர்கள் இராமாயணத்தை அருமையாகப் பாடியதற்காக இராமன் ஒரு தட்டில் இரத்தினக் கற்களை வைத்து அவர்களுக்குப் பரிசு கொடுக்கச் சொன்னன். அவர்கள் அப் பரிசை ஏற்றுக்கொள்ளாது ''உலகத்தவர்கள் போக்கு இத்தகையது. ஜடப்பொருளாகிய இரத்தினம் அவர்களுக்கு மதிப்புடையது. ஆனல் எங்களுக்கு அது தேவையில்லை. நாங்கள் அருந்துவதற்குக் காய் கனிகள் இருக்கின்றன. உள்ளத்துக்கு மேலான கருத்து இருக்கிறது. எங்களுக்கு அது போதும்'' என்று கூறி இராமன் தந்த சன்மானத்தை ஒதுக்கித் தள்ளினர்கள்.

இராமன் அப்பொழுது இலட்சுமணனைப் பார்த்துப் பகர்ந்ததாவது: ''இலட்சுமணு! இத்தகைய தியாக உள்ளம் படைத்தவர்களே நாட்டை ஆள்வதற்கு வல்லவர்களாவார்கள்.'' வால்மீகி மகரிஷியும் அப்பொழுது அங்கு வந்தார். அக்குழந்தைகள் யார் என்று இராமன் மகரிஷியிடம் கேட்டான். ''ஆஸ்ரமவாசிகள்'' என்று மகரிஷி பதில் தந்தார். ''யாருடைய குழந்தைகள்?'' என்று திரும்பவும் கேட்டான் இராமன். ''சீதையினுடைய குழந்தைகள்'' என்ருர் மகரிஷி. ''எந்தச் சீதை'' என்று கேட்டான் இராமன். ''இராமா! உலகுக்குத் தெரிந்த சீதை எத்தனைபேர் இருக்கின்ருர்கள்?'' என்று கேட்டார் வால்மீகி. இராமன் திகைப்படைந்தவனுய் ''சீதை பரிசுத்தமானவளென்பதை நீங்கள் நிரூபிக்க முடியுமா?'' என்று கேட்டான். ''சீதையின் பரிசுத்தத்தைச் சீதையே நிரூபிப்பாள்'' என்று கூறுகையில் சீதாபிராட்டியும் அங்கு வந்து சேர்ந்தாள். குழந்தைகள் இருவரையும் இராமனிடம் ஒப்படைத்துச் சீதை குழந்தைகளைப் பார்த்துப் பகர்ந்ததாவது: ''குழந்தைகளே! நீங்கள் கதாநாயகனுகப் பாராட்டிய இராமன்தான் உங்கள் தந்தை. நீங்கள் எந்தச் சீதையைப் பாராட்டிப் பாடினீர்களோ அந்தச் சீதைதான் நான். இதுகாறும் உங்களுக்குத் தாய் தந்தை யார் என்று தெரிவிக்காது உங்களை வளர்க்கும் பெரிய சோதனை எனக்கு ஏற்பட்டிருந்தது. அந்தச் சோதனையைச் சமாளித்து விட்டேன். நான் பரிசுத்தமானவளா இல்லையா என்பதை உலகம் அறியவேண்டியுள்ளது. அதன் பொருட்டு உங்கள் தந்தை என்னைப் பரிசோதிக்கின்ருர். அவருக்கும் எனக்கும் உள்ள அன்பு ஒருநாளும் மாருது. என்னை வால்மீகி மகரிஷி ஏற்றுக்கொண்டது நான் பரிசுத்தமானவள் என்பதற்குச்சிறந்த சான்ருகும்.யாரும் புகட்டாது இக்ஷ்வாகு வம்சத்துக்குரிய அஸ்திரசஸ்திரங்களை நீங்களாகவே அறிந்து கொண்டது என்னுடைய தூய்மைக்கு மற்ெருரு சான்ருகும். அயோத்தி இராமன் பால இராமனுக இருந்து சீதா இராமனுனன், பிறகு அவன் இராஜாராமனுனன். அதுவரையிலும் நான் அவனுக்கு மனைவி என்ற முறையில் வாழ்ந்திருந்தேன். இராமன் என்னைக் காட்டுக்கு அனுப்பிய பிறகு மகரிஷி அவனை எனக்கு ஆத்ம இராமனுக்கிவிட்டார். இனி, புறத்தில் எனக்கு ஒன்றும் தேவையில்லை. உங்களை நான் ஒப்படைக்க வேண்டிய இடத்தில் ஒப்படைத்து விட்டேன். தாய் தந்தையர் இருவருடனும் சேர்ந்து வாழும் பாக்கியம் உங்களுக்கு இல்லை. அது உங்களுக்கு ஏற்பட்ட தௌர்ப்

பாக்கியம். இதுகாறும் நீங்கள் தாயுடன் வாழ்ந்திருந்தீர்கள். இனி, தந்தையுடன் வாழ்ந்திருப்பீர்கள். நான் யதாஸ்தானம் செல்கின்றேன். ஆத்ம ராமன் என் உள்ளத்திலே இருக்கின்ருன். பரிசுத்தமுடைய வளாக நான் இருந்தமையால் மகரிஷி எனக்குப் பிரம்ம ஞானம் ஏற்பட அனுக்கிரஹம் செய்தார்.'' இங்ஙனம் கூறிச் சீதை பூமியில் மறைந்தாள்.

சீதா பிராட்டி பரிசுத்தத்தை நிரூபிப்பதற்கு எத்தகைய சோதனைக்கு ஆளாகின்ருள்! எழுந்திரு, விழித்திரு, நாடிய கருமம் கைகூடும் வரை உழைத்திரு என்ற வாக்குக்கு இணங்க ஜீவாத்மா என்ன பாங்கில் வாழவேண்டும் என்பதைச் சீதாபிராட்டி வாழ்ந்து காட்டியுள்ளாள். இராமாயணத்தில் வருகின்ற பெரியோர்கள் வாழ்க்கை அனைத்தும் ஆத்ம சாதனையை விளக்குவதாக இருக்கின்றன. ஜீவாத்மா என்ன பாங்கில் பரமாத்மாவுடன் தொடர்பு கொள்ள வேண்டுமென்பதையும், எத்தகைய தவத்தில் ஈடுபடவேண்டுமென்பதையும் சீதை விளக்கி இருக்கின்ருள். இராமனும் சீதையும் ஆதியோடு அந்தமாகத் தவ சொருபமாக விளங்குகின்ருர்கள்.

இந்துமதத் தெய்வங்களுடைய வரலாறுகளை ஆராய்ந்தாலும் தவ வாழ்க்கைக்கு விளக்கம் கிடைக்கும். பார்வதி தேவி பரமேசுவரனை மணந்து கொள்வதற்காகக் குமரியாக இருந்து தென்முனையில் தவம் புரிகின்ருள். பர்வதராஜனுடைய புதல்வி பார்வதி. பர்வதம் என்பது மலை. அது ஜடப்பொருள். மலையிலிருந்து வந்தவள் பார்வதி. தவத்தின் மூலம் அவள் சிவத்தை அடைந்தாள். பார்வதி தேவி மலையில் தோன்றிச் சிவத்தை அடைந்தது போன்று ஜீவர்களாகிய நாம் ஜடசக்தியில் தோன்றித் தவத்தின் மூலமாகச் சிவத்தை அடையலாம். மானுட வடிவெடுத்த சீதை தவ சொருபமாக இருந்து இராமனை அடைகின்ருள்.

நாம் அனைவரும் மேன்மை அடைவதற்குத் தவம் உற்ற உபாயமாகிறது. 'தவம் செய்வார் தம் கருமம் செய்வார் மற்றல்லார் அவம் செய்வார் ஆசையுட்பட்டு' என்பது குறள். வாழ்க்கைத் தத்துவத்தை மறந்து உலக விவகாரங்களில் ஈடுபடும் பொழுது நாம் அவம் செய்தவர்களாகின்ருேம். நாம் தவம் செய்வதற்காகப் பிறப்பெடுத்து உலகுக்கு வந்திருக்கின்ருேம். உலக சுகத்தில் மூழ்கி அதில் கட்டுண்டவர்களாகச் சொருபத்தை மறந்திருப்பது தவமாகாது. துணியில் முடியொன்று போட்டுக் கொள்வது காரியத்தை ஞாபகப்படுத்திக் கொள்வதற்கு உதவுகின்றது. உலகத்திற்கு நாம் வந்திருப்பது கடவுள் வழிபாட்டுக்கென்பதை ஞாபகப்படுத்திக் கொள்வதற்குத் துணியில் முடியொன்று போட்டுக்கொள்ள வேண்டும். கடவுள் வழிபாட்டிற்காக வந்திருக்கின்ருேம் என்ற முடியைப் போட்டுக் கொண்டு உலகக் கிருத்தியங்களில் ஈடுபட வேண்டும். எப்பொழுதும் அதில் கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டும். அதில் எவ்வளவு சிரத்தை காட்டவேண்டும் என்பதைச் சீதாபிராட்டியாருடைய வாழ்க்கையும் ஆஞ்சநேயனுடைய வாழ்க்கையும் பெருமக்கள் எல்லாருடைய வாழ்க்கையும் எடுத்துக் காட்டுகின்றன.

அப்பெரியார்களுடைய ஆற்றல்களனைத்தையும் ஒவ்வொருவரிடத்திலும் பரமாத்மா வைத்திருக்கின்ருர். அண்டத்தின் சக்தி முழுவதும் ஓர் அணுவிலும் இருக்கிறது என்பதை இன்றைய பௌதிக விஞ்ஞானிகள் நிரூபித்திருக்கின்ருர்கள். பரமாத்மாவின் சக்தி முழுவதும் நம்மிடத்திலும் இருக்கிறது. ஆனல் அச்சக்தி நம்மிடத்து உறங்கிக்கொண்டிருக்கிறது. அச்சக்தி உறங்கிக் கொண்டிருக்குமாறு வைத்துக் கொண்டு அருள்நாட்டம் அற்றவர்களாக வாழ்ந்து வருவோமாஞல் வாழ்வை விரயம் செய்தவர்களாகின்ருேம். அப்படி வாழ்வை விரயம் செய்வது நம்முடைய தௌர்பாக்கியமாகும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் பிறவியிலேயே சித்த புருஷராக இருந்தார். அத்தகையவர் தேவியின் தரிசனத்துக்காக என்ன பாடுபட்டார் என்பது நமக்குத் தெரியும். ஆறு மாத காலம் உண்ணுதும் உறங்காதும் தெய்விகத் தரிசனத்துக்காகப் புலம்பிக்கொண்

டிருந்தார். சித்த புருஷனுக இருந்த நரேந்திரர் மக்களின் முன்னேற்றத்துக்காக அரும்பாடுபட்டார். இங்ஙனம் உலகில் அரிய பெரிய காரியங்களைச் செய்ய வந்தவர்கள் அரும்பாடுபட்டார்கள். அவர்கள் சோம்பி இருந்தவர்களல்லர்.

பாரமார்த்திகப் பெருவாழ்வைப் புறக்கணித்துவிட்டுச் சோம்பலுக்கு இடம் தந்து வீண்காலம் போக்குவோமானுல் அது நம்முடைய தௌர்பாக்கியம். எழுமின், விழிமின், நாடிய கருமம் கை கூடும்வரை உழைமின் என்ற கோட்பாட்டின்படி உண்மையாக உழைப்போமானுல் கட்வுள் நமக்குத் தேவையானவற்றையெல்லாம் தாமாக அருளுகின்ருர். கொடுக்கின்ற தெய்வம் கூரையைப் பிய்த்துக்கொண்டு வந்து கொடுக்கும் என்பது கோட்பாடு. நாம் எதற்குத் தகுதியுடையவர்களாக நம்மைச் செய்துகொள்ளுகிருேமோ அதைக் கட்வுள் நமக்கு நல்குகிருர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் குருவை நாடிப் போகவில்லை. அவர் அருள்நாட்டம் கொண்டிருந்தார். அவரை நாடிக் குருமார்கள் வந்தனர். அவர் தாந்திரிகசாதனை செய்ய விரும்பினுர். தாந்திரிக சாதனை முறையைப் புகட்டுவதற்கு அவரைத் தேடிக்கொண்டு பைரவி பிராம்மணி அம்மையார் தக்ஷிணேசுவரத்துக்கு வந்தார். பைரவி பிராம்மணியைக் குருவாக ஏற்றுக்கொண்டு அவரிடமிருந்து ஸ்ரீ ராமகிருஷ்ணர் தாந்திரிக சாதனை முறையைக் கற்றுக்கொண்டார். பிறகு தெய்வாதீனமாக ஏவப்பட்டுத் தோதாபுரி என்ற மஹான் தக்ஷிணேசுவரம் வந்தார். அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்த்து, “ நான் உனக்கு அத்வைத சாதனையைப் புகட்டுவதற்காக வந்துள்ளேன் '' என்று கூறி வைதிக விதிப்படி ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குச் சந்நியாச தீக்ஷை செய்து வைத்தார். அத்வைத மார்க்கத்தையும் புகட்டினுர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்வதாவது: ‘‘ ஒருவனுக்கு ஈஸ்வர கிருபை வாய்த்திருக்கலாம்; மகாபுருஷர் ஒருவர் அவனுக்குக் குருவாகவாய்த்திருக்கலாம்; சத்சங்கம் பாதுகாப்பாகக் கிடைத்திருக்கலாம்; கிடைப்பதற்கரிய அம்மூன்றும் கிடைத்திருந்தும் அவனுக்கு அவன் மனதின் கிருபை அமையாவிட்டால் அம்மூன்றும் அனர்த்தமாய்ப் போய்விடும்.'' எல்லா வசதிகளுக்கிடையிலும் ஒருவனுடைய முயற்சி இல்லாவிட்டால் அவ்வளவும் வீணுகப் போய்விடும். முயற்சி திருவினையாக்கும் என்பது கோட்பாடு. முயற்சியின்மூலம் பலர் பெரியமூர்த்திகளாக ஆகியிருக்கிருர்கள். உழைப்பின் மூலம் நம்மிடத்தில் பேராற்றல் தோன்றுகிறது. அப்பேராற்றலைப் பயன்படுத்துகின்ற அளவு அது மேலும் நம்மிடத்து வளர்கிறது. நாம் பெருவாழ்வு வாழக் கற்றுக்கொள்வோமானுல் அப்பெருவாழ்வுக்கேற்ற ஆற்றல் நம்மிட்ம் வெளியாகின்றது.

விவேகானந்தர் சித்த புருஷராக இருந்தார். அவரிடம் இருந்த பேராற்றலை ஸ்ரீ ராமகிருஷ்ணர் தட்டி எழுப்பினுர். அவருக்கு நிர்விகல்ப சமாதியை விளையாட்டுப்போன்று தந்தார். அவரை உலகுக்குப் பெரிய கைங்கரியம் செய்யும் மூர்த்தியாகவும் மாற்றியமைத்தார். மிகக் கீழ் நிலையிலிருந்த கிரீஷ் சந்திரகோஷ் பரமஹம்சரோடு தொடர்பு வைத்தார். கிரீஷரைக் கண்ணுல் பார்ப்பதும் பெரிய பாபம் என்று ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சிஷ்யர்கள் கூறினுர்கள். அதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்ததாவது: ‘‘கிரீஷ் பக்தி நிறைந்த நாடகங்களை எழுதி இருக்கின்ருனும். அவன் நடிப்பதிலும் சமர்த்தனும். அவன் நடிப்பதைப் பார்க்கவேண்டும். அவன் பக்திமானுக நடிப்பதனுலும், பக்தி நாடகத்தை எழுதுவதனுலும் அவன் நல்லவனுகத்தான் இருக்கவேண்டும். எனவே அவன் நாடகத்தை நான் பார்க்க விரும்புகின்றேன்.'' ஸ்ரீ ராமகிருஷ்ணரின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு ஒரு நாள் அவரை அரை மனதுடன் கிரீஷ்சந்திரருடைய நாடகக் கொட்டகைக்குச் சிஷ்யர்கள் அழைத்துப் போனுர்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் வண்டியில் அமர்ந்துகொண்டு சென்ருர். நாடகக் கொட்டகைக்குப் பக்கத்தில் வண்டி சென்றவுடன் ஸ்ரீ ராமகிருஷ்ணர் வண்டியில் வருகின்ற விஷயத்தைக் கிரீஷ்சந்திரரிடம் அறி

வித்தார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணரை நேரில் வந்து வரவேற்ருல் நன்ருயிருக்கும் என்றும் கூறினர்கள். அவர்களிடம் குடிவெறியிலிருந்த கிரீஷ் கூறியதாவது: ''வண்டியில் வந்தவருக்கு இங்கு வரத்தெரியாதா?'' இங்ஙனம் கூறிவிட்டு அரைமனதுடன் கிரீஷ் எழுந்து போனர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் வந்த வண்டியின் கதவைத் திறந்தார் கிரீஷ். ராமகிருஷ்ணர் வண்டியை விட்டுக் கீழே இறங்கினர். முதலில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கிரீஷரை வணங்கினர். கிரீஷரும் வணங்கினர். இரண்டாம் முறை இராமகிருஷ்ணர் கைகூப்பி வணங்கினர். கிரீஷர் கையைக் கொஞ்சம் தாழ்த்திக்கொண்டார். மூன்ரும் முறை இராமகிருஷ்ணர் கிரீஷரைக் கைகூப்பி வணங்கினர். கிரீஷ் பேசாமல் நின்றுகொண்டிருந்தார்.

கிரீஷர் தம் கைக்குள் அகப்பட்டுக்கொண்டார் என்பது இராமகிருஷ்ணருக்குத் தெரிந்தது. ஆனல் மற்றவர்களுக்கு இக்கருத்து விளங்கவில்லை. அன்றைக்குப் பிரகலாதன் நாடகம் நிகழ்ந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ணரை உயர்ந்த இடத்தில் அமரச் செய்யும்படி கிரீஷர் கூறினர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் ''அதற்குரிய பணம் நான் தரமாட்டேன்'' என்ருர். ''நீங்கள் பணம் தரவேண்டியதில்லை'' என்ருர் கிரீஷர். ''நான் நாடகத்தைச் சும்மா பார்க்கமாட்டேன்; நான் காசுகொடுத்துத் தான் பார்ப்பேன்'' என்ருர். ''உங்களுக்கு விருப்பமானதைத் தாருங்கள்'' என்று கிரீஷர்கூறினர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் மேடையில் அமர்ந்து நாடகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார். நாடகம் மிக அற்புதமாக இருந்தது. பிரகலாதன் நாடகத்தைப் பார்க்கும்பொழுது இராமகிருஷ்ணருக்குச் சமாதி நிலைகூடிவிட்டது. கிரீஷர் நாடகத்தில் நடித்தார். அவருடைய நடிப்பு மிக அற்புதமாக இருந்தது. அவர் சாதாரணமானவரல்லர் என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் அறிந்துகொண்டார்.

நாடகம் முடிந்ததும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கிரீஷரைத் தக்ஷிணேசுவரத்துக்கு வருமாறு அழைத்தார். கிரீஷரும் வருவதாகச் சம்மதம் கொடுத்துவிட்டார். கிரீஷர் வாக்குக் கொடுத்து விட்டால்அதினின்றும் மாறமாட்டார். எனவே தாம் வாக்குக்கொடுத்தபடி ஒருநாள் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்ப்பதற்குக் கிரீஷர் தக்ஷிணேசுவரம் சென்ருர். குடிவெறியுடன் சென்ற கிரீஷர் ஸ்ரீ ராமகிருஷ்ணரைத் திட்டவும் ஆரம்பித்தார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் புன்முறுவலோடு அவர் திட்டுதலை ஏற்றுக்கொண்டார். கிரீஷர் குடிவெறியில் தம் சட்டைப்பையில் கையை வைத்தார். சட்டைப்பையில் அவருக்குப் பாட்டில் அகப்படவில்லை. உடனே ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒரு பாட்டிலை அவர் முன் வைத்தார். கிரீஷருக்கு வெட்கமாகப் போய்விட்டது. ''நீங்கள் எனக்கு ஏதாவது உதவிசெய்ய முடியுமா?'' என்று கிரீஷர் ராமகிருஷ்ணரைக் கேட்டார். ''நான் நாடகத்தில் இப்படி இருக்கவேண்டும், அப்படி இருக்கவேண்டும் என்றெல்லாம் எழுதியிருக்கிறேன். நான் எழுதியிருப்பது வேறு, நடந்துகொள்வது வேறு. எனவே நான் கடைப்பிடிப்பதற்குச் சாத்தியமானது ஏதாவது நீங்கள் சொல்ல முடியுமா?'' என்று கிரீஷர் மேலும் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் கேட்டார். ''இறைவனுடைய நாமத்தை உச்சரிப்பது மிகவும் எளியது. அதைவிட் எளிய மார்க்கம் இல்லை. எனவே உனக்கு நான் மந்திர உபதேசம் செய்து வைக்கின்றேன். நீ அந்த மந்திரத்தை நாள்தோறும் காலையிலும் மாலையிலும் நூற்றெட்டுமுறை ஜபம் செய்து வரவேண்டும். நீ அதைச் செய்வாயா?'' என்று இராமகிருஷ்ணர் கேட்டார். ''நான் அதைச் செய்ய முடியாது. நீங்கள் எனக்கு வேலை கொடுக்கக் கூடாது. நீங்கள் ஏதாவது எனக்கு நலம் செய்ய முடியுமா?'' என்ருர் கிரீஷர். ''சரி, மந்திரத்தை நீ நூற்றெட்டுத் தடவை ஜபிக்கவேண்டாம். காலையில் மூன்று முறையும் மாலையில் மூன்று முறையும் ஜபித்தால் போதும். இதையாவது நீ செய்வாயா?'' என்று இராமகிருஷ்ணர் கேட்டார். ''அதுவும் செய்யமுடியாது. உங்களிடம் நான் சொல்லிவிட்டால் சொன்னபடி நான் நடந்துகொள்ள வேண்டும் அல்லவா? எனவே நான் அதைச் செய்ய முடியாது'' என்ருர். ''மேலும்

உனக்குச் சலுகை தருகிறேன். உன் விருப்பம்போல் நடந்துகொள்ளலாம். உனக்கு ஞாபகம் வருகிறபொழுது நீ செய்கின்ற செயலை எனக்கு அர்ப்பணம் செய்'' என்று கேட்டுக்கொண்டார் ராமகிருஷ்ணர். ''ஞாபகம் வந்தால் நான் செய்யும் செயலை உங்களுக்கு அர்ப்பணம் செய்கின்றேன். ஞாபகம் வராவிட்டால் அது என்னுடைய குற்றமாகாது'' என்று கூறிவிட்டுக் கிரீஷர் விடைபெற்றுச் சென்றார். இவ்வாறு ஒருவரை ஆட்கொண்டதை இதுவரையிலும் வரலாற்றில் நாம் பார்த்ததில்லை.

கிரீஷர் ராமகிருஷ்ணரிடம் விடைபெற்றுப்போய் இரண்டு வாரங்கள் ஆகிவிட்டன. அதன் பிறகு அடாத செயல் ஒன்றும் அவரால் செய்ய முடியவில்லை. பொருந்தாத செயல்ஏதாவது செய்யமுயல்வாரானால்ராமகிருஷ்ணருடைய ஞாபகம் அவருக்கு வந்துவிடும். இந்தப் பொருந்தாத செயலை அந்த மகானுக்கு அர்ப்பணிப்பது பொருந்துமா? என்று எண்ணுவார். உடனே அந்தச் செயலிலிருந்து தம்மை விடுவித்துக்கொள்வார். அப்படி ஒவ்வொரு கெட்ட செயலிலிருந்தும் கிரீஷர் தம்மை விலக்கிக் கொண்டார். விவேகானந்தரோடு சமமாக வைப்பதற்கு ஏற்ற உயர்நிலையைக் கிரீஷரும் அடைந்துவிட்டார். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய மறைவுக்குப் பின்பு ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சிஷ்யர்கள் எல்லாரும் ஓர் இடத்தில் ஒரு சமயம் கூடினார்கள். அக்கூட்டத்தில் கிரீஷரும் இருந்தார். துறவறச் சிஷ்யர்கள் ஒவ்வொருவரும் ராமகிருஷ்ணருடைய பெருமையை எடுத்து விளக்கினார்கள். கிரீஷருடைய முறை வந்தது. கிரீஷர் பகர்ந்ததாவது: '' நான் இக்கூட்டத்தில் அமர்ந்திருப்பதே அவருடைய பெருமையை விளக்குவதாகும். அதற்கு மேல் அவரைப்பற்றி நான் சொல்வதற்கு ஒன்றும் இல்லை. நான் அவரோடு இணக்கம் வைக்காமல் இருந்திருந்தால் குடித்துவிட்டு நான் இந்த நேரத்தில் சாக்கடைப் பக்கம் உருண்டுகிடப்பேன். நான் அவரோடு இணக்கம் வைத்ததன் விளைவாக இத்திருக்கூட்டத்தில் நானும் ஒருவனாக அமர்ந்திருக்கின்றேன். இத்திருக்கூட்டத்தில் நான் அமர்ந்திருப்பதே அவருடைய பெருமையை விளக்குவதற்குப் போதுமானது.'' கிரீஷரே உய்வடைந்தார் என்றால் எல்லாருக்கும் உய்வுண்டு என்பது தெளிவாகின்றது. சரியான தூண்டுதலும் உழைப்பும் இருந்தால் உயர்வடைவது தானே நிகழ்கிறது. வாயு வேகம் மனோ வேகம் போன்று உழைப்பின் மூலம் உயர்வடையலாம் என்பதற்குக் கிரீஷருடைய வாழ்க்கை சான்றாக இருக்கிறது. கிரீஷர் ஒரே பிறவியில் உயர்நிலையை அடைந்தாரென்றால் நம் அனைவருக்கும் இதே பிறவியில் விமோசனம் உண்டு என்பது உறுதியாகிறது. அதற்கேற்ப உழைத்தால் நாம் உயர்ந்து விடலாம். முறையாகப் பாடுபட்டால் ஒரே பிறவியில் மேல் நிலைக்கு வந்துவிடலாம். விவேகானந்தர் '' எழுமின்! விழிமின்!! இறுதிவரை உழைமின்!!!'' என்பதன் மூலமாக நமக்குக் கொடுத்துள்ள செய்தி இதுவேயாகும். ஆத்மபோதம் பெற்று எழுந்திருப்பதை எழுமின் என்பதன் மூலம் சுவாமி விவேகானந்தர் நமக்கு ஞாபகமூட்டுகிறார். ஆத்மீக உணர்வு இப்பொழுது நம்மிடத்தில் உறங்கிக் கொண்டிருக்கிறது. அவ்வுணர்வைத் தட்டி எழுப்புதல் வேண்டும். உயர்நிலையிலிருந்து மீண்டும் கீழ்நிலைக்குப்போய்விடாது மனதை உயர்நிலையிலேயே வைத்திருப்பதற்கு நாம் விழிப்புடன் இருக்கவேண்டும். அதை ''விழிமின்'' என்பதன் மூலம் நமக்கு ஞாபகமூட்டுகிறார். மனோநாசம் நிகழும் வரையில் நாம் தொடர்ந்து தீவிரமாகச் சாதனை செய்து வரவேண்டும். மனோநாசம் நிகழ்வதற்கு முன்பு எக்காரணத்தைக் கொண்டும் சாதனையை நிறுத்திவிடக் கூடாது. இதனை ''இறுதிவரை உழைமின்'' என்பதன் மூலம் நமக்கு ஞாபகமூட்டுகிறார். எனவே எழுமின், விழிமின், கருதிய கருமம் கைகூடும்வரை உழைமின் என்ற கோட்பாட்டைப் பெரிய மனதுடன் ஏற்று விசுவாசம் நிறைந்த மனதுடன் அதைச் செயல்படுத்திப் பெரிய மூர்த்திகள் ஆக முயல்வோமாக. உள்ளிருக்கும் தெய்வம் உந்திக் கொடுத்து அதிவேகமாக நாம் மேன்மை அடைவதற்கு உதவி புரிவாராக. (முற்றும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-174

*964.* बन्धूककुसुमप्रख्या பந்தூககுஸுமப்ரக்யா— பந்தூக புஷ்பத்தின சிவப்பு நிறமுடையவள் என்பது இந்த நாமத்தின் பொருள். நிறங்களனைத்தும் அம்பிகையின் சொரூபங்களே. அவைகளுக்கிடையில் சிவப்பு நிறம் சிறப்பாக எடுத்துப் பகரப் பெறுகிறது. பிரபஞ்சம் எங்கும் உள்ள செயல்களனைத்தும் அம்பிகையின் செயல்களாம். செயல்களைப் பண்புடன் செய்து முடிப்பதற்கு ரஜோகுணத்தின் பாங்கு இன்றியமையாதது. ரஜோகுணத்தின் நிறம் சிவப்பு. ஆதலால் அம்பிகையின் மேனி சிவப்பு நிறமானது எனச் சிலாகித்துச் சொல்லப்படுகிறது.

*965.* बाला பாலா— விளையாட்டுப் பருவத்திலிருக்கும் சிறுமி என்பது இந்த நாமத்தின் பொருள். இயற்கையும் அம்பிகையும் சொரூபத்தில் ஒன்றே. இயற்கையானது தொல்லுலகமாக இருந்து வருகிறது எனினும் அதனிடத்து யாண்டும் இளமையைக் காண்கின்றோம். காலத்தையே ஆபரணமாக அணிந்திருக்கும் அம்பிகை காலத்தைக் கடந்து உள்ள சிறுமியாகச் சர்வகாலமும் இலங்கி வருகின்றாள். விளையாட்டுப் பருவத்திலிருக்கும் சிறுமியிடத்துச் சிறப்பு ஒன்றைக் காண்கிறோம்.

சிறுமி ஒருத்தியின் விளையாட்டில் யாண்டும் இனிமை ததும்புகிறது. ஏனென்றால் விருப்பையும் வெறுப்பையும் அடையப் பெறாத தூய நிலையிலிருந்துகொண்டு அவள் விளையாடுகிறாள். அவ்விளையாட்டைப் பார்ப்பவர்களும் சிறிது நேரமாவது தங்களுடைய இன்பதுன்பமயமான வியவகாரங்களை ஒதுக்கித்தள்ளிவிட்டு மன அமைப்பில் அச்சிறுமியின் பாங்கைப் பெறுகின்றனர். முதியோர்களுக்கிடையில் இது பெறுதற்கரிய பேறாகும். ஏனென்றால் பரம்பொருள் தானே பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்ட பரமானந்தமயமாய் இருக்கின்றது. குழந்தை ஒன்றன் விளையாட்டைக் கண்டுகொண்டிருப்பவர்களுக்குச் சிரமமின்றி அப்பாரமார்த்திகப் பெருநிலை தானாக வந்தமைகிறது.

இனி, இயற்கையும் பராசக்தியும் சொரூபத்தில் ஒன்றேயாம். ஆதலால்தான் இயற்கையினிடத்து யாண்டும் இளமை ததும்பிக் கொண்டிருக்கிறது. படைத்தல், காத்தல், துடைத்தல் மயமாக இயற்கையானது யாண்டும் இயங்கி வருகிறது. எனவே, இச்செயல் அம்பிகைக்குரியது. இதை அவள் வேடிக்கை விநோதம் காட்டுகின்ற பாங்கிலே எளிதில் செய்து சாதிக்கிறாள். மக்களுள் பெரும்பான்மையோர் அக்ஞானக் காரிருளில் உழன்றுகொண்டிருக்கின்றனர். படைத்தலும் காத்தலும் அவர்களுக்கு விருப்பமான செயல்களாகின்றன. துடைத்தல் என்னும் பயங்கரச் செயலும் அக்ஞானமும் ஒன்றேயாம். துடைத்தலை ஒரு விளையாட்டாக எடுத்துக்கொள்வது நிறை ஞானிக்கே சாத்தியமாகிறது. அத்தகைய நிறை ஞானியே பாலா என்னும் நாமம் படைத்துள்ள அம்பிகையின் விளையாட்டில் முழுதும் பங்குகொள்ள வல்லவனாகிறான்.

பாலா என்னும் நாமம் தரித்துள்ள அம்பிகை உபாசனைக்குரிய மூர்த்தியாம். அவளைத் தியானிப்பதற்கேற்ப ஆத்ம சாதகன் தன் மன அமைப்பில் சிறுமி ஒருத்தியின் பாங்கைஅடையப் பெறுகிறான். யாண்டும் விளையாட்டில் ஈடுபட்டுள்ள சிறுமி ஒருத்திக்கும் துயரத்துக்கும் வெகுதூரம். ஆதலால் அதேபாங்கு பாலாவை உபாசிப்பவனுக்கும் வந்தமைகிறது. இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்னும் பாரமார்த்திகப் பெருநிலை பாலா என்னும் நாமம் படைத்துள்ள அம்பிகையை முழுமனதோடு உபாசிப்பவனுக்கு வந்தமைகிறது.

*966.* लीलाविनोदिनी லீலாவிநோதினீ— லீலைகளால் மகிழ்வடைகிறவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

உலகிலே நாள்தோறும் கண்டுவரும் அரிய காட்சியொன்று உளது. சிறுமிகள் மணலைக் கொண்டு வீடு கட்டுகின்றனர். அத்தகைய வீட்டுக்கு விருந்தினரை வரவழைக்கின்றனர். அப்படி வரவழைக்கப்பட்டவர்களுக்கு அச்சிறுமிகள் மணல் மயமாயுள்ள அன்ன

பானம் முதலியன வழங்கி உபசரிக்கின்றனர். கடைசியாகத் தங்கள் விளையாட்டுக்கு ஏதுவாயிருந்த வீடு முதலியவைகளை விளையாட்டாகத் துடைத்துத் தள்ளுகின்றனர். ஆதியோடந்தம் இருந்தது வெறும் மணல். அந்த மணலை முகாமையாகக்கொண்டு சிறுமிகள் தங்களுக்குத் தாங்களே இத்தனைவிதமான விநோதங்களை உண்டுபண்ணிக்கொண்டனர். அவர்கள் யாண்டும் ஆனந்தத்தின் பாங்கு படைத்தவர்கள். அன்னவர்களுக்கு ஆனந்தத்தை ஊர்ஜிதப்படுத்துவதற்கு மணல் பயன்பட்டது. அதே விதத்தில் அன்னை பராசக்தி ஆனந்த மயியாக யாண்டும் இருந்து வருகின்றாள். அவளுடைய குழந்தைகளாகிய உயிர்வகைகளும் யாண்டும் ஆனந்தத்தில் திளைத்திருக்கின்றன. இப்பிரபஞ்ச வாழ்வு அந்த ஆனந்தத்தை உறுதிப்படுத்துதற்கு உதவுகிறது. பிரபஞ்ச வாழ்வு என்பது ஓயாத விளையாட்டு. விளையாட்டு என்று சொல்வதும் லீலை என்று சொல்வதும் ஒரே நிலைக்கேற்ற விளக்கங்களாம். அன்னை பராசக்தியோ யாண்டும் நித்திய லீலையில் ஈடுபட்டிருக்கின்றாள். அவளுடைய குழந்தைகளாகத் திகழும் ஜீவகோடிகளுக்கு இன்பமும் துன்பமும் மாறி மாறி அமைகின்றன. துன்பத்தோடு சீர்தூக்கிப்பார்த்து இன்பத்தை ஜீவகோடிகள் அனுபவிக்கின்றன. மற்று, அன்னை பராசக்தியோ ஜீவகோடிகள் படுகின்ற துன்பத்தைப் பார்ப்பதிலும் மகிழ்வடைகிறாள். கருணையே வடிவெடுத்துள்ள அவள் ஜீவகோடிகள் துயரத்தில் மகிழ்வடைவது பொருந்துமா என்னும் கேள்வி எழலாம். இக்கேள்விக்குப் பொருத்தமான விடையை ஜீவகோடிகளிடத்தே காண்கிறோம். பெற்றெடுத்த தாயொருத்தி சிறிது நேரம் மறைந்திருந்து தன்னைத் தேடியலைகிற குழந்தையின் துயரத்தில் மகிழ்வடைகிறாள். அந்நிலையில் அவள் அடைகின்ற இன்பம் ஒப்புயர்வற்றது. அதன் சிறப்பை அவளே அறிந்துகொள்கிறாள். வேறு யாருக்கும் அந்த ஆனந்தத்தின் சிறப்பு விளங்காது. இதே பாங்கில் லீலாவிநோதினியாயிருக்கின்ற அன்னை பராசக்தியும் இடையிடையே தன் குழந்தைகளுக்குத் துயரத்தைக் கொடுத்து அத்துயரத்தைப் பார்த்து மகிழ்வடைகிறாள். ஆதலால்தான் விநோதினி என்னும் பெயர் அவளுக்குப் பொருத்தமாக அமைந்திருக்கிறது.

ஆனால் தன் குழந்தைகளின் துயரம் வரம்பு கடந்து போவதற்கு அவள் இடம் தருவதில்லை. கருணாகர முகம் கொண்டு தன்னை நாடி அழுகின்ற குழந்தைகளுக்குக் கண் துடைத்து ஆறுதல் அளிக்கின்றாள். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டே 'வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே' என்று மாணிக்கவாசகர் பகர்ந்துள்ளார்.

அன்னை பராசக்தியின் லீலா விநோதங்களை நாம் எளிதில் அறிந்துகொள்ளுதற்கு மற்றோர் உபமானம் தேவையாய் இருக்கிறது. இரண்டு நாய்க்குட்டிகள் ஒன்றையொன்று கடித்துச் சண்டை போட்டுக் கொள்கின்றன. அந்நாய்க் குட்டிகளுக்கு அது பெரிய போராட்டம். அதை வேடிக்கை பார்க்கின்ற சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் அது லீலா விநோதமாம். நாய்க்குட்டிகளின் சண்டையில் பொருள் ஏதும் இல்லை என்பது சிறுவர்களின் வியாக்கியானம். அதே விதத்தில் மண்ணுலகில் நிறுவப் பெற்றுள்ள பெரிய பெரிய சாம்ராஜ்யங்கள் ஒன்றோடொன்று கடும்போர் புரிகின்றன. அந்தந்த நாட்டு மக்களின் கருத்துப்படி உலகுக்கு இந்த யுத்தங்கள் தாங்க முடியாத நாசகாரிகளாக வந்தமைகின்றன. ஆனால் அன்னை பராசக்திக்கோ அப்போராட்டங்கள் யாவும் வெறும் விநோதங்களேயாம். நாய்க்குட்டிகளின் சண்டைக்கும் சாம்ராஜ்யங்களின் போராட்டங்களுக்கும் இடையில் எந்தவிதமான வேற்றுமையையும் அன்னை பராசக்தி காண்பதில்லை. ஆதலால் அவள் லீலாவிநோதினீ என்னும் பெயர் படைத்துள்ளாள்.

967. ஸுமங்கலீ சுமங்கலீ — யாண்டும் நலன் தரும் மூர்த்தியாயிருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

உலக நடைமுறையில் மணந்துகொண்டு தன் கணவனோடு நல்வாழ்வு வாழ்ந்து வருபவள் சுமங்கலீ என அழைக்கப் பெறுகிறாள்.

அன்னை பராசக்தியோ யாண்டும் பரவஸ்து மயமாக இருப்பவள். பரவஸ்துவை ஆண் பாலாகக் கருதுமிடத்துப் பரப்பிரம்மம் எனவும் சதா சிவம் எனவும் பொருள்படுகிறது. அதே பரவஸ்துவைப் பெண்பாலாகக் கருதுமிடத்துப் பரதேவதை எனவும் ஆதி சக்தி எனவும் பொருள்படுகிறது. சக்தியும் சிவமும் அத்வைத வஸ்து. துவைதம் என்றால் இரண்டு. அத்வைதம் என்றால் இரண்டன்று. பொருள் ஒன்று; அந்த ஒரு பொருள் இரண்டு விதக் காட்சிகள் தந்து கொண்டு யாண்டும் உள்ளது. உபமானம் ஒன்றின் மூலம் இத்தத்துவத்தை விளக்குவோம். கடலின் மேற்பகுதி அலைவீசி உருண்டோடி விளையாடிக் கொண்டிருக்கிறது. கீழ்ப்பகுதி அசைவற்று யாண்டும் இருந்தபடி இருக்கிறது. அசைவற்று இருக்கிற கீழ்ப்பகுதி சதாசிவத்துக்கு நிகரானது. உருண்டோடி விளையாடிக் கொண்டிருக்கும் மேற்பகுதி சக்தியின் சொரூபத்துக்கு நிகரானது. கடலிலே இங்ஙனம் பகுதிகள் இரண்டு எனினும் பொருள் ஒன்றேயாம். அதே பாங்கில் சிவமும் சக்தியும் ஒரு பொருளின் இரண்டு விதப் பாங்குகளாம். அசையாப் பாங்கு சிவம் எனவும் அசையும் பாங்கு சக்தி எனவும் கருதப்படுகின்றன. ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்சர் இக்கோட்பாட்டை இன்னும் மிக எளிய உபமானம் ஒன்றின் வாயிலாக விளக்குகிறார். சர்ப்பம் ஒன்று சுருண்டு படுத்திருக்கிறபொழுது பிரம்மம் எனவும் அது வளைந்து வளைந்து போய்க் கொண்டிருக்கிறபொழுது சக்தி எனவும் அழைக்கப்படுகின்றது.

அசையாப் பகுதியாகிய பரப்பிரம்ம சொரூபத்தைச் சொல்லால் விளக்குவது மிகக்கடினம். சக்தியின் லீலையோ வேண்டியவாறு விளக்குதற்கு இடந்தருகிறது. சக்தியின் விளையாட்டில் யாண்டும் நலனே நிறைந்திருக்கிறது. ஆதலால்தான் அவள் சுமங்கலீ என அழைக்கப்பெறுகிறாள். நலன், கேடு ஆகிய இரண்டும் நிரம்பப்பெற்றது பிரபஞ்சம். கேடாகத் தென்படும் பகுதியை மங்கள சொரூபம் என்று மொழிவது எங்ஙனம் என்ற கேள்வி எழலாம். பரமனுக்கு நன்றுடையான், தீதிலான் என்னும் அடைமொழியைப் பக்தர் ஒருவர் வழங்கியுள்ளார். சிவனார் கழுத்தில் நச்சுப்பாம்பு ஒன்று நெளிந்து நெளிந்து நகர்ந்து கொண்டிருக்கிறது. அதை முன்னிட்டுச் சிவனார் பன்னக பூஷணன் என அழைக்கப்படுகிறார். பாம்பு ஒன்று சிவனார் மேனியில் இருப்பது அவருக்கு அலங்காரம். அதே பாம்பு ஜீவாத்மன் ஒருவனைத் தீண்டினால் அது அவனுக்குக் கேடாக முடிகிறது. இங்ஙனம் ஜீவாத்மனுக்குக் கேடாக இருக்கும் பகுதிகளைத் தையும் சக்தியோடு சம்பந்தப்படுத்திப் பொருள்படுத்த ஆத்ம சாதகன் கடமைப் பட்டிருக்கின்றான். இறுதியில் ஜீவாத்மனும் தன்னை முற்றிலும் அம்பிகையோடு இணைத்துக் கொள்வானாகில் கேடுகளாகத் தென்பட்டவைகள் யாவும் மங்களமாக மாறி அவனுக்குக் காட்சி தருகின்றன.

இனி, பிரபஞ்சம் முழுதையும் அன்னை பராசக்தியின் சொரூபமாகப் பாராட்டிப் பார்ப்போமாகில் அதில் தென்படுகின்ற அனைத்தும் மங்களமாகவே காட்சி தருகின்றன. ஜீவகோடிகள் நோய்வாய்ப்பட்டு வருந்துவதையும் முடிவில் அவை யாவும் மரணத்துக்கு ஆளாவதையும் மங்களமாகக் கருதுவது எங்ஙனம் என்பது கேள்வி. நோய்வாய்ப்படுவதன் வாயிலாக ஜீவர்கள் பண்பாடு அடைவதைக் கருத்தில் எடுத்துக் கொள்வோமாகில் நோய் நோயாகத் தென்படாது. அடுத்தபடி, மரணமோ அந்த ஜீவனைப் புதுப்பித்துக் கொண்டிருக்கிறது. சூரியன் அஸ்தமன சூரியனாகவும் உதய சூரியனாகவும் காட்சி தருகிறான். அதே விதத்தில் அன்னை பராசக்தி உயிர்களை மரணத்தின் மூலம் புதுப்பித்துக்கொண்டிருக்கிறாள். குறை காட்சி காண்பவனுக்கு உலகில் தீங்கு ஏராளமாகத் தென்படுகிறது. இதே உலகைப் பக்தர்களும் ஞானிகளும் அன்னையின் சொரூபமாகக் காண்பதனால் இதில் நலனே நிறைந்திருக்கிறது. அன்னையைச் சுமங்கலீ எனப் பொருள்படுத்துவது முற்றிலும் பொருத்தமானதே. இப்பெயருக்கொப்ப பிரபஞ்சத்தைப் பொருள்படுத்துபவன் நல்ல ஆத்ம சாதகனாகிறான்.

# குட்டித் திருவாசகம்

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன், M. A.)

முன்னுரை:

காலத்திற்கு ஏற்றவாறு உணவுப் பழக்கம் மாறுகிறது. காலத்திற்கு ஏற்றவாறு உடை விதத்திலும் மாறுதல் உண்டாகிறது. காலப்போக்கில் இவை போன்ற மாறுபட்ட பழக்க வழக்கங்கள் தாமாகவே வந்து அமைகின்றன.

ஒருகாலத்தில் ஏற்படுகிற உணவுப் பழக்க மாற்றம் வாழ்க்கையைப் பாதிக்கிறது; ஏற்படுகிற உடை மாற்றம், மக்கள் அணியும் ஆடை விஷயத்தையும் பாதிக்கிறது.

இதே முறை இலக்கிய நூல்கள் தோன்றுவதற்கும் பொருந்தும். காலத்திற்கு ஏற்றவாறு இலக்கிய நூல்கள் தோன்றுகின்றன. ஒருகாலத்தில் ஏற்படுகின்ற காலச் சூழ்நிலையும், சமுதாயச் சூழ்நிலையும் இலக்கியங்களில் பிரதிபலிக்கின்றன. அதாவது ஓர் இலக்கிய நூலிலிருந்து, அந்தக் காலத்தில் இருந்த காலச் சூழ்நிலை, சமுதாயச் சூழ்நிலை, பிற பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை அறிந்துகொள்ளலாம்.

நம் நாட்டில் அறத்தோடு சேர்ந்த ஆட்சிமுறை, அமைதியுடன் கூடிய வாழ்க்கைமுறை அமைந்திருந்த காலத்தில் புராணங்கள், இதிகாசங்கள், பெருங்காப்பியங்கள் முதலிய இலக்கியங்கள் தோன்றின. வாழ்க்கை அமைதியாக இருந்தது; நீண்ட பெரிய இலக்கியங்கள் தோன்றின. சேக்கிழார் சுவாமிகள் காலம், கவிச் சக்கரவர்த்தி கம்பர் காலம் ஆகிய பெருமக்களின் காலங்களில் எல்லாம் நம் நாட்டில் அமைதியான சமூக வாழ்வு அமைந்திருந்தது.

அந்நியர் ஆட்சி:

களப்பிரர் காலம் என்ற காலம் ஒன்று தமிழகத்தில் ஏற்பட்டிருந்தது. களப்பிரர் என்னும் இனத்தார் தமிழ்நாட்டில் சிறிது காலம் ஆட்சியைக் கைப்பற்றியிருந்தனர். அவர்களுடைய ஆட்சியில் திருக்கோயில்கள் பராமரிக்கப்படவில்லை. நாள்தோறும் கோயில் பூஜைக்கு இடையூறு ஏற்பட்டது. பல விதத்திலும் தமிழ் நாட்டு மக்கள் இன்னல்களை அனுபவித்தனர். களப்பிரர் ஆட்சியை இருண்ட காலம் என்று வரலாற்று ஆசிரியர்கள் சொல்லுவார்கள்.

காலப் போக்கில் வேற்றுச் சமயத்தவர்களின் ஆட்சி, அந்நிய நாட்டினரின் ஆட்சி என்று பலவகையான ஆட்சிமுறைகளை மக்கள் அனுபவித்தனர். அவர்களுடைய ஆட்சியில் அமைதியற்ற சமூக வாழ்வு ஏற்பட்டுவிட்டது. இப்படிப்பட்ட சமுதாய வாழ்வு அமைந்துவிட்டதன் காரணமாகக் காப்பியங்களை இயற்றி மகிழக் கூடிய சூழ்நிலை ஏற்படாமல் போய்விட்டது. காப்பியங்களையோ பேரிலக்கியங்களையோ படித்துச் சுவைத்து மகிழும் எண்ணமும் மக்களிடையே இல்லை.

காலச் சூழ்நிலை, மக்களின் மனநிலை மாறுபாடு முதலியவற்றின் காரணமாகப் பேரிலக்கியங்கள் தோன்றுவது குறையத் துவங்கியது.

சிற்றிலக்கியச் செல்வங்கள்:

பத்தாயிரம், பன்னிரண்டாயிரம் பாடல்கள் பாடி அமைக்கக்கூடிய பேரிலக்கியங்கள் குறையவும் சிற்றிலக்கியங்கள் தோன்றி வளரத் தொடங்கின. சிற்றிலக்கியங்கள் பாட்ல்களின் எண்ணிக்கையில் குறைந்தவை. ஒரு நூலில் நூறு பாடல்கள் முதல் நூற்று மூன்று பாடல்கள் வரை அமைந்திருக்கும். குறைந்த நேரத்துக்குள் முழு நூலையும் படித்து முடித்துவிடலாம். இம்முறையில் சிற்றிலக்கியங்கள் தோன்றலாயின.

புதிய உத்திகளைக்கொண்டு எளிய சிற்றிலக்கியங்கள் தோன்றின. சமுதாயத்தில் எளிய, வறிய நிலையில் வாழக்கூடிய பாமர மக்களின் வாழ்க்கை முறை, அவர்கள் செய்கிற தொழில், வழிபடக்கூடிய தெய்வங்கள், உணவுப் பழக்க முறை ஆகியவற்றைப் பாடலில் பாடத்தக்க பொருளாக எடுத்துக்கொண்டு பாடல் பாடினர்கள். பள்ளம் என்றால் வயல். பள்ளத்தில் வேலை செய்பவர்கள் பள்ளர்கள். இவர்களுடைய வாழ்க்கையை மையமாகக் கொண்டு சிற்

றிலக்கியங்கள் பாடினர். பள்ளு என்பது இந்நூலின் பெயர்.

மலையில் வாழ்கின்ற குறவர்களின் வாழ்க்கையை விவரித்துச் சிற்றிலக்கியம் செய்தார்கள். இதற்குக் குறவஞ்சி என்பது பெயர். இவ்வாறு சமுதாயத்தின் அடித்தள மக்களின் வாழ்க்கையை விவரிக்கும் பள்ளு, குறவஞ்சி ஆகிய நூல்களைப் போல, சான்றோர்கள், அரசர்கள், தெய்வம் இவர்கள் பேரிலும் சிற்றிலக்கியங்கள் பாடப்பட்டன.

பேசுகின்ற பேச்சு உயர்ந்ததாக இருக்க வேண்டும். எண்ணுகின்ற எண்ணம் உயர்ந்த பொருளைப்பற்றியதாக இருப்பதே நியாயம் ஆகும். இறவாத பெருநூல்களாக நூல்கள் இலங்க வேண்டுமானால், பிறவாத, சாவாத, மூவாப் பெரும் பொருளை அந்நூல்கள் பேச வேண்டும். அழியாத உண்மைப் பொருளை உணர்த்துகின்ற இலக்கியங்கள், மிதவை இலக்கியங்களைப் போலக் காலவெள்ளத்தில் அடித்துக் கொண்டு செல்லப்படுவதில்லை. அவை கால ஓட்டத்தைக் கடந்து நிற்கும் நிலைபேறு உடையவை.

சிற்றிலக்கியங்கள் கடவுளைப்பற்றிப் பேசுகின்றபோது சிரஞ்சீவித் தன்மை பெற்று விடுகின்றன.

**தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்கள்:**

தமிழில் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்கள் சிற்றிலக்கியச் செல்வங்களாகத் திகழ்கின்றன என்பது சான்றோர் எண்ணம்.

அந்தாதி, கலம்பகம், பிள்ளைத் தமிழ், தூது, பரணி, குறவஞ்சி முதலியவை பிரபந்த நூல்களில் சில ஆகும்.

**அந்தாதி:**

அந்தம்+ஆதி=அந்தாதி. பாடல்கள், நூறு முதல் நூற்று மூன்றுவரை இருக்கும். ஒரு பாடலின் அந்தம்-இறுதி- அடுத்த பாடலுக்கு ஆதியாக-ஆரம்பமாக-இருக்கும். ஆதி-தொடக்கம். நூல் முழுவதும் சங்கிலியால் இணைக்கப்பட்டதுபோல் இருக்கும். இது புது வடிவம் கொண்ட நூல் அமைப்பு. நினைவு வைத்துக் கொள்வதற்கும், மனப்பாடம் செய்து கொள்வதற்கும் வசதியானது.

எப்படி? ஒரு பாடலின் கடைசி ஓர் அடியோ, இரண்டு சீர்களோ, ஒரு சீரோ, எழுத்தோ அடுத்த பாடலின் ஆரம்பமாக இருக்கும். முதல் செய்யுளை முடிக்கும்போதே அடுத்த செய்யுளின் நினைவு தானாக வந்து விடும் அளவுக்கு இவ் அமைப்பு துணை செய்கிறது.

**திருக்கருவைப் பதிற்றுப்பத்து அந்தாதி:**

கருவை என்பது கரிவலம் வந்த நல்லூர். பதிற்றுப்பத்து-பத்து × பத்து-நூறு. அந்தாதி-ஒரு பாடலின் அந்தம் அடுத்த பாடலுக்கு ஆதியாக அமைவது அந்தாதி.

**நூல் வரலாறு:**

திருநெல்வேலி மாவட்டம் சங்கர நயினார் கோயில் என்னும் ஸ்தலத்துக்கு அருகில் உள்ள சிவ ஸ்தலம் கரிவலம் வந்த நல்லூர். குலசேகர பாண்டியன் என்னும் பாண்டிய மன்னன் வேட்டையாடக் கானகம் சென்றான். அப்போது எதிரே ஒரு யானை வந்தது. யானையை மன்னன் துரத்தினான். யானை சிவாலயத்தை அடைக்கலமாக நாடி ஓடி அங்கே சிவபெருமான் வீற்றிருந்த புதரை வலம் வந்து வணங்கியது.

கரியாகிய யானை வலம் வந்து வணங்கியதால் அவ்வூர் கரிவலம் வந்த நல்லூர் என்னும் பெயரைப் பெற்றது. தஞ்சாவூர் தஞ்சை ஆனது போல, திருநெல்வேலி நெல்லை ஆனது போல, கரிவலம் வந்த நல்லூர் கருவை என்று மருவியது.

இத்தலத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள ஈசனின் திருநாமம் பால்வண்ண நாதர், திருக்களாவீசர், முகலிங்கர் என்பனவாகும்.

இது படிகலிங்கம்; ஆகவே, பால்வண்ண நாதர் என்று மக்கள் அழைக்கிறார்கள். களா மரம் ஸ்தல விருட்சம். ஆகவே, திருக்களா ஈசர் என்னும் திருநாமம் உண்டாயிற்று. திருமுகத்தோடு கூடி விளங்கித் தோன்றும் லிங்கம்; எனவே, முகலிங்கர் என்னும் திருப்பெயரும் ஏற்பட்டது.

**நூல் ஆசிரியர்:**

இற்றைக்குச் சற்றேறக் குறைய 500 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த அதிவீரராம பாண்டியர் என்னும் பாண்டிய மன்னர், திருக்கருவைப் பதிற்றுப் பத்து அந்தாதி

என்னும் இந்நூலைப் பாடியருளினர்.

வழிவழியாகப் பெரும் புலமை பெற்றுப் பாடல்கள் பாடிய பாண்டிய மன்னர்களின் பரம்பரையில் ஏறத்தாழ கடைசிக் காலத்தில் வாழ்ந்தவர் அதிவீரராம பாண்டியர். தமிழிலும் சம்ஸ்கிருதத்திலும் பெரும் புலமை பெற்றவர். சைவநெறி தவருத சிவப்பற்றுளர். தென்பாண்டி நாட்டில் அமைந்துள்ள கொற்கை என்னும் ஊரிலிருந்து குறுநில மன்னராக ஆட்சி செலுத்தியவர்.

இம்மன்னருக்குக் கல்வி கற்பித்த ஆசிரியர் ஸ்ரீ சுவாமிநாததேவர். ஸ்ரீ அகோர சிவாச்சாரியர் என்பவர் இம்மன்னருக்குச் சிவ திட்சை செய்தார்.

நளன் வரலாற்றைக் கூறுகின்ற நைஷதம் என்னும் சம்ஸ்கிருத நூலை நைட்தம் என்னும் பெயரால் தமிழில் மொழி பெயர்த்தார். திருக்கருவைக் கலித்துறை அந்தாதி, திருக்கருவை வெண்பா அந்தாதி, நறுந்தொகை, கூர்மபுராணம், லிங்கபுராணம், காசிகாண்ட்ம் ஆகிய நூல்களைத் தமிழிலே இயற்றியும் சம்ஸ்கிருதத்தில் இருந்து மொழி பெயர்த்தும் தந்துள்ளார்.

**குட்டித் திருவாசகம் :**

அதிவீரராம பாண்டிய மன்னர் பாடிய திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி என்னும் இந்நூல் சொல்வளமும் பொருள் வளமும் நிரம்பியது; ஊனினை உருக்கி, உள்ளத்துள்ளே ஞான ஒளி பெருக்கி பக்திச் சுவையை மிகுதிப்படுத்தும். உள்ளங்கலந்து பாடுகின்றவர்களுக்கு ஊன் கலந்து, உயிர் கலந்து உவட்டாமல் உயிருக்கு இனிமை பயக்கும் திருவாசக அருள்நூலைப் போல அளவிலே சிறிய இந்த அந்தாதி நூலை ஒப்பிட்டுக் "குட்டித் திருவாசகம்" எனப் போற்றுவர் சான்ருேர். திருவாசகத்தைப் படித்தால் எத்தகைய மன உணர்வு உண்டாகுமோ அதில் ஒரளவாவது இந்த அந்தாதி நூலைப் படித்தால் உண்டாகும் என்பது ஆன்ருேர் அனுபவ உண்மை.

திருவாசகத்தை அகம் உருகி, மனம் கரைந்து, ஒருவர் தன்னை முழுமையாக ஈடுபடுத்திப் பாடவேண்டும் என்பது இல்லை. கருங்கல் மனமும் கசிந்துருகும் திருவாசகத்தைப்பாடினல். எத்தகைய மனம் உடையவராயினும் சரி; திருவாசகத்தைக் கேட்கின்றவர்கள் அகம் குழைந்து, எலும்பு நெக்குருகிப் புளகாங்கிதம் அடைந்து கண்ணீர் சொரிவார்கள்.

பட்ர்க்கைக் கூற்ருக அமையாமல் திருவாசகம் தன் கூற்ருக அமைந்துள்ளது. யார் திருவாசகத்தைப் பாடுகின்ருரோ அவரே அனுபவிப்பது போல அனுபவம் உண்டாகிறது. மன்னர் அதிவீரராம பாண்டியர் தமிழ் இலக்கண இலக்கியங்களை, சைவப் பெருநூல்களை ஐயம் திரிபு அறக் கற்றவர். திருவாசகத்தில் மனதைப் பறிகொடுத்தவர். அரசராக வீற்றிருந்து ஆட்சிபுரிந்த அப்பெருமகனுர் இறை உணர்வில் தலைநின்று, தன்னை உணர்ந்து, தன்னிலை கெடுவதற்கு, நன்னிலை பெறுவதற்குக் குட்டித் திருவாசகம் என்னும் திருக்கருவைப் பதிற்றுப் பத்து அந்தாதி என்ற இவ் அரிய நூலைப் பாடினர் என்ருல் அம்மன்னனின் பக்திப் பெருக்கை எவ்வாறு பாராட்டுவது !

மன்னர் அதிவீரராம பாண்டியர் திருக்கருவைப் பதிற்றுப் பத்து அந்தாதியைப் பாடியதாகப் பார்த்தோம்.

இவருடைய சகோதரர் வரதுங்கராம பாண்டியர் என்னும் பாண்டிய மன்னர். இவர்தாம் திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதியைப் பாடினர் என்பது ஆராய்ச்சிப் பேரறிஞர் ஒருவருடைய முடிவு.

காரணம் யாதோ ?......

சீரார் கமலச் சேவடிஎன்
சிந்தை இருத்தி, உனதுதிருப்
பேர்ஆ யிரமும் எடுத்தோதிப்
"பெம்மான்! கருவை எம்மான்?" என்று
ஆரா அமுதம் உண்டவர்போல்
அனந்தா னந்தத்து அகம்நெகிழ
ஆரா இன்பம் அறிவித்தாய் ;
அறியேன் இதற்கோர் வரலாறே.

பெருமை மிக்க தாமரை போன்ற பாதங்களை எனது உள்ளத்தில் பதித்து, உன் பெருமைக்கு உரிய ஆயிரம் திருநாமங்களையும் எடுத்து ஓதி, "பெருமானே! திருக்கருவையில் எழுந்தருளியிருக்கும் எமது

இறைவனே!'' என்று துதி செய்து, தெவிட்டாத அமுதம் உண்டவரைப் போல, அளவு இல்லாத ஆனந்தத்திலே உள்ளமானது உருகித் தோய, யான் இதுவரையும் அனுபவித்து அறியாத இன்பநிலையை எனக்குக் காட்டியருளினாய். உன்னுடைய இந்த அருட்செயலுக்கு என்ன காரணமோ? அறியேன்! தாமரை போன்ற உன் திருவடிகளை என் உள்ளத்தில் இருத்தினேன்'' என்கிறார்.

''இறைவனுக்கு உருவம் கிடையாது; ஏனென்றால் இன்ன வடிவினன், இன்னநிறத்தினன்எனயாராலும்கூறஇயலாது. இப்படிச் சொல்லுவது யாருக்கு? எல்லாவற்றையும் கடந்த நிலையில் உள்ளவர்களுக்காகச் சொல்லப்படுகிறது. யான் என்னும் அகப்பற்று, எனது என்னும் புறப்பற்று ஆகிய பற்றுக்களையெல்லாம் கடந்த ஞானிகளுக்கு, வேறு உணர்வு எதுவும் இல்லாத இறை உணர்வில் தோய்ந்த சான்றோர்களுக்காகச் சொல்லப்படுகிறது. அவர்களுக்கு இறைவன் அருவ வடிவினனாகக் காட்சி தருகிறான். மனம், வாக்கு, காயம் மூன்றையும் வென்றவர்களுக்கு இறைவன் அருவ வடிவினன்.

மனப்பக்குவம் அடையாதவர்களுக்கு, உலகப்பற்றுக்களையெல்லாம் விட்டொழிக்க இயலாதவர்களுக்கு இறை உணர்வு ஏற்பட வழி என்ன? உலகப் பற்றுக்கள் மனத்தில் நிறைந்து கிடப்பதால், இறைவனுடைய அருவ வடிவம் இவர்களுக்குத் துலங்குதற்கு வழி இல்லை. அப்படி வழி இல்லாமல் போனால் இறை வழிபாடு, இறை உண்மை, இறைக்காட்சி கிட்டாமல் போய் விடும்.

இவ்வாறு இவர்கள் பேரிழப்பிற்கு ஆளாவதை நம் சான்றோர்கள் விரும்பவில்லை. அவர்களுக்கும் கடைத்தேறும் வழியைச் சொல்லி இருக்கிறார்கள். மன ஒருமைப்பாடு இல்லாமல், சிந்தனையைச் சிதறவிட்டு அதன் காரணமாகக் கடவுள் காட்சி கிடைக்காமல் போய்விடக்கூடாது என்பதற்காக, இறைவன் உருவம் உடையவன் என்னும் தத்துவத்தையும் தங்கள் முதிர்ந்த அனுபவ அறிவால் நம் முன்னோர்கள் கூறியுள்ளார்கள். உருவம் உடைய இறைவனை மனத்திலே இருத்தி வழிபடுவதற்கும், மன ஒருமைப்பாட்டைப் பெறுவதற்கும், ''இறைவன் உருவ வடிவினன்'' என்னும் தத்துவம் நல்ல துணையாக அமைகிறது.

இறைவனை நிமிர்ந்து வணங்கும்போது அவனுடைய கமல முகம் தோன்றுகிறது. பணிந்து தொழும்போது தாமரைப் பாதங்கள் தோன்றுகின்றன. உண்மையிலேயே இறைவனுடைய பாதம் மனதில் தோன்றுமா?

''அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேரலின், ஏகினான் என இறந்தகாலத்தால் கூறினார்'' என்று பரிமேலழகர் கூறுகிறார். பரிமேலழகர் சிறந்த ஞானி. வள்ளுவரா கிய ஞானியின் உள்ளத்தை நன்கு அறிந்தவர். எனவே, இவ்வாறு கூறுவதன் மூலம், உள்ளன்புடன் இறைவனை நினைத்தால், என்ன வடிவத்தில் நினைக்கிறார்களோ அவ் வடிவத்தில், நினைத்த மாத்திரத்திலேயே விரைவில் உள்ளத்தில் வந்து வீற்றிருப்பான் என்று சான்றோர்களின் அனுபவ உண்மையைக் கூறுகின்றார்.

மானிட வடிவம் கொண்டால், விரைந்து நடந்து வருவதற்குப் பாதங்கள் துணையாகின்றன. எனவே, விரைந்து வரும் பாதங்கள் மனத்திலே நிறைந்துள்ளன என்கிறார். 'வாசுதேவன்' என்னும் பெயரில், வாசு என்பதற்கு உறையச்செய்பவன், தங்கச் செய்பவன் என்பது பொருள். எல்லாரும் தங்குவதற்கு இருப்பிடம் கொடுக்கும் இறைவன் வாசுதேவன்.

இப்படி எல்லாரும் தங்குவதற்கு இடம் கொடுக்கும் இறைவன், விரும்புகின்ற அடியார்களின் உள்ளத்திலே வந்தும் வீற்றிருக்கின்றான்.

விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் ஆண்டவனுக்கு ''அனுகூல: சதாவர்த:'' என்னும் பெயர் வருகிறது. அதன் பொருள் எல்லாருக்கும் அனுகூலமாயிருப்பவன், நூறு முறையும் ஓடோடி வருபவன் என்பதாகும் என ஆன்றோர் ஒருவர் கூறுவதும் இங்கு நினைக்கத்தக்கது.

காலாலே இறைவன் விரைந்து வருவான்

என்பதைவிட, இன்னும் அதிகமாக வேகத்தைக் காட்டுவதற்கு, இறைவன் விரைவில் வருவான் என்பதற்குத் திருமாலுக்குக் கருடனையும், முருகனுக்கு மயிலையும், சிவனுக்கு எருதையும் வாகனங்களாக அமைத்தார்கள்.

பக்தி சிரத்தையுடன் யார் அழைத்தாலும் இறைவன் வருவான் என்பதை மனதிற்கொண்டு, அதிவிரராம பாண்டியர் இங்கே, "சீரார் கமலச் சேவடி என் சிந்தை இருத்தி" என்கிறார்.

"உனது திருப்பேர் ஆயிரமும் எடுத்து ஓதி" என இயம்புகின்றார் மன்னர் அதிவிர ராமர்.

இறைவன் நாமரூபங்களுக்கு அப்பாற்பட்டவன். ஒரு பெயரும் இல்லாதவனுக்கு ஆயிரம் பெயர்கள் வழங்கப்படுகின்றன. சந்தியா வந்தனத்தில் ஆண்டவனின் 24 திருநாமங்கள் வருகின்றன. விஷ்ணு ஸகஸ்ர நாமத்தில் ஆயிரம் பெயர்கள் இருக்கின்றன. அளவற்ற பெயர்கள் ஆண்டவனுக்கு உண்டு.

இவ்வளவு பெயர்கள் இருந்தும் இறைவன் பெயர் அற்றவன். அவனுக்குப் பெயரே கிடையாது. அப்படி என்றால் என்ன பொருள்? இறைவன் உள்ளத்தால் உணரப் பெறுபவன்; உள்ளறிவால் அவனே அறிய வேண்டும் என்பது தான் பொருள்.

இஸ்லாமிய சமயத்தில் கடவுளுக்கு 99 பெயர்கள் சொல்லப்படுகின்றன. அவர்களுடைய ஜபமாலையில் 99 மணிகள் அமைந்துள்ளன. பார்ஸி வகுப்பைச் சேர்ந்தவர்கள் ஆண்டவனுக்கு 24 திருநாமங்களைச் சொல்லுகிறார்கள்.

பலவகையான மரங்களைத் தோட்டத்தில் பார்க்கின்றபோது அந்த அமைப்பு எழில் மிக்கதாகிறது. பல வண்ண மலர்களை ஒரு சேர மாலையில் கோத்துப் பார்க்குமிடத்து, மாலையின் அழகு அதிகமாகின்றது.

ஆயிரம் திருநாமங்களைச் சொல்லி இறைவனை வழிபடும்போது, இறைவனின் மஹிமையை அதிகம் சொல்பவர்களாகிறோம்.

ஒரு நாமத்தைச் சொல்லி இறைவனின் பெருமையைக் கூறுவதில் திருப்தி அடையாத உள்ளம் ஆயிரம் திருநாமங்களைச் சொல்லி நிறைவு அடைகிறது.

ஓதுதல் என்பதற்கு மனம் ஒன்றித்துச் சொல்லுதல் என்பது பொருளாகும். இறைவன் திருநாமத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லுதல் ஜபம் எனப்படும்.

---

## ஒரு நல்ல தொண்டு

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பது முதுமொழி. நோயில் இரண்டு விதம் உண்டு. ஒன்று உடலைப்பற்றியது; மற்றது உள்ளத்தைப்பற்றியது. உடலைப்பற்றிய நோயை மருத்துவர்கள் கண்டு பிடிக்கின்றனர். மன நோயை மனிதன் தானே சரிப்படுத்தவேண்டும். மனநோயை நீக்குவதற்கு நல்லறிவு ஒன்றே உற்ற உபாயமாகிறது.

நோய் வாராமல் தடுப்பதற்கும், ஆரோக்கியமான வாழ்வு வாழ்வதற்கும், மனதைத்திருத்தி அமைப்பதற்கும் உரிய வழிகளை விளக்கும் 'நோய்க்கு இடங்கொடேல்' என்னும் சிறிய நூல் ஒன்று தபோவனத்திலிருந்து வெளியாகியுள்ளது. ஆஸ்பத்திரியிலிருக்கும் நோயாளிகளுக்கிடையில் இந்தப் புத்தகத்தைப் படிக்கக் கொடுத்துப் பின் திரும்ப வாங்குவது நல்ல பலன் தரும். இப்பணியில் ஊக்கமுடைய அன்பர்கள் சில பிரதிகளை வாங்கிக் கைவசம் வைத்துக்கொள்ளலாம். பிறகு டாக்டர் அனுமதி பெற்று ஆஸ்பத்திரி சிப்பந்திகளைக்கொண்டு இந்தப் பணிவிடையை நன்கு நிறைவேற்றலாம்.

இப்புத்தகத்திலிருந்து மாதிரிக்குச் சில வாக்கியங்கள்: உடல் நோய்வாய்ப்படுவது இயற்கையின் கூறு. உள்ளம் அதைக் குறித்து அல்லல்படுவது மனிதனுடைய மடமையின் விளைவு. மனநோய் மேனியின் நோயைவிடக் கொடியது. சகிப்புத்தன்மை வாய்ப்பதற்கரிய பெரிய பேறு ஆகிறது. அல்லல்படுவதால் நோயின் வேகம் அதிகரிக்கிறது. அமைதியுடன் அதைப் பொறுத்துக்கொள்வதால் நோயின் வேகம் தணிகிறது. சகிப்புத் தன்மை உள்ளத்துக்குரியது; அது உடலுக்கு உரியதன்று.

# கபீர்தாசர் சரிதம்

நாம் முனிவர்கள் பரம்பரையில் வந்தவர்களாகின்றோம். முனிவர்கள் என்பவர்கள் மனதிலுள்ள அழுக்கைப் போக்கியவர்களாகிறார்கள். அவர்கள் மனதைப் பிரம்மத்தின்கண் ஒருமுகப்படுத்தினார்கள். அவர்களுக்குப் பிரம்மம் என்னும் மெய்ப்பொருளைப்பற்றிய உண்மை விளங்கியது. அவர்கள் கூறிய உண்மைகளே மெய்ப்பொருளைப்பற்றிய உண்மைகளாகும். எக்குலத்தில் பிறந்தவர்களானாலும் மனதை மாசற்றதாக்கிப் பிரம்மத்தின்கண் ஒருமுகப்படுத்துவார்களானால் பிரம்மத்தைப்பற்றிய உண்மைகளெல்லாம் அவர்களுக்கு விளங்குகின்றன. அவர்கள் கண்டறிந்த உண்மைகள்தாம் வேதங்களாகும். அவ்வேதங்களையெல்லாம் கிரமப்படுத்தித் தருவதற்கு வியாசர் என்னும் முனிவர் தோன்றினார். மோசலமாமுனிவர் என்னும் மகான் ஒருவர் இருந்தார். அவரைப் பின்பற்றியவர்கள் முசல்மான்களானார்கள். பாரம்பரியமாகச் சில குலத்திற்குச் சில இயல்புகள் இருந்து வருகின்றன. பொதுவாகப் பிராம்மண குலத்தவர்களுக்கு அறிவுக்கூர்மை இருக்கும். க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவர்களுக்கு வீர சுபாவம் இருக்கும். அதைபோன்று துலுக்கர் அல்லது துருக்கர் குலத்தில் பிறந்தவர்களுக்கு முரட்டுத்தனம் இருக்கும். குலப்பாகுபாடு என்பது சமுதாயத்தைப் பொருத்ததாகும். சமயத்திற்கும் குலத்திற்கும் எந்த விதமான தொடர்பும் இல்லை. க்ஷத்திரிய குலம் பிராம்மணகுலம் என்று சொல்லுவது போன்று துலுக்கர் குலமும் குலங்களுள் ஒன்றாகும். இக்குலத்தினர் நாளடைவில் இஸ்லாம் மதம் என்ற ஒரு மதத்தை ஏற்படுததிவிட்டனர். துலுக்கர் குலத்தில் தோன்றியவர் கபீர் என்பவர். அக்குலத்திலுள்ள முரட்டு ஆச்சாரங்களையெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு ராம பக்தியில் ஆழ்ந்து உண்மையான மதம் என்ன என்று வாழ்ந்து காட்டினார். அவர்தாம் கபீர் என்னும் மகான் ஆவார்.

வாரணா, அசி என்னும் இரண்டு நதிகள் கூடுமிடம் வாரணாசியாகும். அதற்குக் காசியம்பதி என்னும் பெயரும் உண்டு. புனித நதியாகிய கங்காதீரத்தில் அவ்வூர் அமைந்திருக்கிறது. உலகப் பற்றற்றுப் பரமனை நாடி இருக்கும் பரிசுத்தர்கள் வாழும் பகுதி காசியாகும். காசியில் காலகதி ஆகின்றவர்களுக்குக் கதிமோக்ஷம் உண்டு. அத்தகைய புண்ணிய பதியாகிய காசியில் துலுக்கர் குலத்தில் தமால் என்னும் பெயர் பூண்ட பெரியார் ஒருவர் இருந்தார். துலுக்கர் குலத்தில் பிறந்திருந்தார் எனினும் அவரிடத்தில் முரட்டுச் சுபாவம் இல்லை. உயிர்களையெல்லாம் தன்னுயிர்போல் பாவித்து உயிர்களிடத்தில் அன்பு பாராட்டி வந்தார். எனவே உயிர்களை வதை செய்யும் கொலைத் தொழிலாகிய கசாப்புத் தொழிலை விட்டு நெசவுத் தொழிலை மேற்கொண்டிருந்தார். அவர் தெய்வ பக்தி மிகுந்தவர். தொழிலை நேர்மையாகச் செய்துவந்தார். அவருக்கு ஜிஜ்ஜா பீபி என்னும் மனைவியார் இருந்தார். கணவனுடைய போக்குக்கு அவர் ஒத்தவராக இருந்தார். பர்த்தாவுக்கு ஏற்ற பதிவிரதையாகவும், தெய்வ நம்பிக்கை உடையவராகவும், ஈகைக் குணம் படைத்தவராகவும் அவர் விளங்கினார். கணவர் மேற்கொண்டிருந்த நெசவுத் தொழிலை அவரும் மேற்கொண்டார். தம்பதிகளிருவரும் சாதுக்கள் சங்கத்தைப் பெரிதும் விரும்பினர். எல்லாச் சமயங்களுக்கும் தெய்வம் ஒன்றுதான் என்று அவர்கள் மக்களுக்குப் போதித்து வந்தனர். இல்லறத்தை நல்லறமாக நடத்தி வந்தார்கள். சாதுக்கள் சேவையை மனமகிழ்வோடு செய்து வந்தார்கள். ஏழைகள்பால் கருணை உள்ளம் படைத்தவர்களாக இருந்தார்கள். இல்லறம் நடத்துவதற்கு வேண்டிய பொருளை நேர்மையான முறையில் ஈட்டி அப்பொருளைக்கொண்டு ஏழைகளுக்கும் சாதுக்களுக்கும் சதாகாலமும் பொருளுதவியும், பணிவிடையும் செய்து வந்தார்கள்.

அவர்கள் இங்ஙனம் முறையாக இல்லறம் நடாத்தி வருகையில் ஒருநாள் அவர்கள்

இல்லத்துக்கு ஒரு மஹாத்மா வந்தார். அவர் மனம் மகிழுமாறு அவரை அவர்கள் உபசரித்தார்கள். அம்மஹாத்மா அவர்களுடைய பணிவிடையைக்கண்டு மனமகிழ்ச்சி அடைந்தார். அவர்களுக்குப் புத்திர பாக்கியம் இல்லாத குறையை அறிந்தார். அவர்களுக்கு ஒருசத்புத்திரன் வாய்ப்பான் என்று அவர்களை ஆசிர்வதித்துச் சென்ருர். அவ் ஆசீர்வாதத்தால் ஜிஜ்ஜாபீபி மகிழ்ச்சி அடைந்தாள். ஆனுல் தமால் முதுமையில் புத்திரப் பாக்கியம் வாய்க்கிறது என்பதைக் கேட்டு நலகத்தார். ஒரு வேளை புத்திரன் பிறந்தாலும் அக்குழந்தை மூலம் மகிழ்ச்சி உண்டாகாது என்ருர் தமால். பெரியோர்கள் வாக்குப் பொய்க்காது என்று ஜிஜ்ஜாபீபி கூறினுள். மண்ணுசை, பொன்னுசை, மகவாசை முதலானவைகள் துக்கம் தரக்கூடியவை என்றும் அவற்றைத் துறப்பதே மேலானது என்றும் பெரியோர்கள் கூறியுள்ளார்கள். அதுதான் தேவவாக்குமாகும்; உண்மை வாக்குமாகும். அவ்வாக்கு ஒரு நாளும் பொய்போகாது. அம்மூவாசைகளையும் விட்டவர்கள்தாம் மனிதர்களாவார்கள். மற்றவர்கள் கீழான மனிதர்களாவார்கள். அத்தகைய மனநிலையைத்தான் நாம் பெறவேண்டும். மகப்பேற்றை விரும்புவது கீழான இச்சையாகும். நித்தியமான பொருளைவிட்டு அநித்தியமான பொருளை இச்சிப்பது மஹாத்மாக்கள்பால் நிகழாது. பெண்புத்தி பின் புத்தி என்பார்கள். புத்திரப் பேற்றிலுள்ள இச்சையை ஒதுக்கிவிட்டு நமக்குரிய தொழிலாகிய நெசவுத்தொழிலை ஈசுவரார்ப்பணமாகச் செய்து வருவதுதான் நாம் செய்யவேண்டிய கடமையாகும் என்று தமால் கூறினுர்.

நெய்வதற்குரிய நூல்களைக் கையில் எடுத்துக்கொண்டு அவற்றை அலசி வருவதற்காகத் தமால் கங்கைக்குச் சென்ருர். கங்கைக் கரையில் பலர் பாகீரதியை நோக்கி "கங்காதேவியே! எங்களுக்கு மகப்பேறு உண்டாகும்படி வரமளிப்பாயாக" என்று பிரார்த்தனை செய்வதைக் கேட்டார். ஜிஜ்ஜாபீபியும் இந்த மக்களைப் போன்றே மாயைக்குள் அகப்பட்டுக்கொண்டிருக்கின்ருள். மாயையிலிருந்து விடுபடுவது அவ்வளவு சுலபமானது அன்று என்பது வெளியாகிறது. ஜிஜ்ஜாபீபி என்ற மனைவியாருடன் கூடி வாழ்வது மாயைக்கு வசப்பட்ட வாழ்வாகும். அடவிக்குப் போய் அனந்த கல்யாண குணங்களையுடைய ஈசனைத் தியானம் செய்வதே உத்தமமானதாகும் என்று எண்ணியவராகப் பட்டு நூல்களைக் கங்கையில் கழுவிக்கொண்டிருந்தார். அப்பொழுது கையிலிருந்த பட்டுநூல் நழுவியது. கங்கை அதை அடித்துக்கொண்டு சென்றது. இது என்ன மாயை! இந்த மக்கள் பிரார்த்தனையையும், மனைவியின் புத்திர வாஞ்சையையும் என் மனம் நினைத்ததால் பட்டுநூல் நழுவிப் போயிற்று. இத்தகைய வீண் எண்ணம் எத்தகைய இக்கட்டில் கொண்டுபோய் விட்டுவிட்டது! இப்பட்டு நூலைக்கொண்டு ஐம்பது உத்தமர்களுக்குப் பசிப்பிணியைப் போக்கலாம் என்று எண்ணியவராய்ப் பட்டு நூலைத் தேடி எடுப்பதற்காகக் கங்கைக் கரையோரம் போய்க் கொண்டிருந்தார். வெகுதூரம் நடந்து கால்கள் சோர்வடைந்தன. மனித நடமாட்டமில்லாத காட்டை அடைந்தார். காட்டை அடைந்தவுடன் இனி நாட்டுக்குப் போய் மனக்குறையுள்ள மனைவியுடன் வாழ்வதைவிட வனத்திலிருந்து தவம் செய்வதே மேலானது என்று ஆங்கு ஒரு பர்ணசாலையை அமைத்தார். அப்பர்ணசாலையில் தங்கிப் பிரார்த்தனையிலும் தவத்திலும் ஈடுபட்டார்.

பூலோகத்தில் தமால் இப்படித் தவத்தில் ஈடுபட்டிருக்கையில் ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீமந் நாராயணன் மெய்ஞ்ஞானியாகிய சுகப்பிரம்மத்தை நோக்கிப் பகர்ந்ததாவது: "அவதூதனே, பூலோகத்தில் பக்திகுறைந்து போய்விட்டது. வாரணுசியில் புண்ணியவதி ஒருத்தி இருக்கின்ருள். அவள் தமால் மனைவி ஜிஜ்ஜாபீபி ஆவாள். அவளுக்கு நீ மகவாகப் பிறந்து பூலோக மக்களுக்கு உண்மையான பக்தியைப் புகட்டி மத வெறி பிடித்தவர்களிடமுள்ள குறைகளை எல்லாம் போக்கி உண்மை நெறி எது என்று காட்டுவதற்காக இஸ்லாம் மதத்தில் தோன்றி என்னை வழுத்தி எம்மதமும் சம

மதம் என்பதை விளக்கிக் காட்டுவாயாக'' என்றார். அதற்குச் சுகர் பகவானைப் பணிந்து ''இறைவா, அழுக்கு நிறைந்த கர்ப்பத்தில் புகுந்து, பிறந்து, மாயையில் சிக்கி, உம்மை மறந்து, பிறவிச் சுழலில் அகப்பட்டு உழலும்படி செய்யாதீர்கள். உயிர்களை ரக்ஷிக்கவேண்டும் என்ற கருணை உமக்குப் பூரணமாய் உண்டு. உம் கருணையினால் மக்களுக்கு மாயை என்னும் திரையை நீக்கி வைப்பீர்களாயின் அவர்கள் பிரம்ம ஞானம் அடைந்து முக்தி அடைவார்கள். அப்படி நான் போகவேண்டுமென்றால் நேரே பூலோகத்திற்குச் சென்று மக்களுக்கு உம் திருநாமங்களின் மஹிமையையும், பிரம்ம ஞானத்தையும் போதித்து வருகிறேன்'' என்றார். அதற்குப் பகவான் ஸ்ரீமந் நாராயணன், ''நீ இவ் உருவத்தில் போவது பொருந்தாது. உனக்குக் கர்ப்பப்பைக்குள் போக விருப்பமில்லாவிடில் நீ சிறு குழவியாக மாறி தமால் தவம் செய்யும் இடத்தில் குழந்தை உருவில் கிடப்பாயாக'' என்றார். சுகரும் அதற்குத் தலை வணங்கினார்.

சுகர் குழந்தை வடிவத்தில் அழுது கொண்டு தமால் தவம் பண்ணும் இடத்திற்குப் பக்கத்தில் கிடந்தார். தமாலின் தவம் கலைந்தபொழுது குழந்தையின் அழுகுரலை அவர் கேட்டார். அழுகைக் குரல் வரும் இடத்தை நோக்கிப்போனபொழுது கோடி சூரியப் பிரகாசமான ஒரு குழந்தையைக் கண்டார். ஜிஜ்ஜாபீபியின் தவம் பலித்தது என்று சொல்லிய வண்ணம் குழந்தையை எடுத்து மார்புடன் அணைத்துக் கொண்டார். தாகத்தை நாடிச் சென்றவனுக்கு அமிர்தம் கிடைத்தது போன்றும், சிப்பியைத் தேடிச் சென்றவனுக்கு முத்துக் கிடைத்தது போன்றும், கல்லைத் தேடிச்சென்றவனுக்கு இரத்தினம் கிடைத்தது போன்றும், பட்டு நூலைத் தேடிவந்த தமக்குத் தவமும், புத்திரனும் கிடைத்ததை எண்ணித் தமால் ஆனந்தமடைந்தார். இறைவனைப் பலவிதமாகத் துதி செய்துகொண்டு காட்டைக் கடந்து வீட்டுக்கு வந்து மனைவியிடம் புத்திரனைத் தந்தார். மகன் கிடைத்த விவரத்தைக் கூறி மகிழ்ச்சியினால் துள்ளிக் கூத்தாடினார். சங்கீதம் பாடி நர்த்தனம் செய்தார். ஜிஜ்ஜாபீபியும் அழகான பிள்ளையைப் பார்த்துப் பெரு மகிழ்ச்சி அடைந்தாள். குழந்தையை எடுத்து மார்பில் அணைத்துக்கொண்டாள். தாம் பெற்ற குழந்தையாகவே நினைத்து அக்குழந்தைக்குப் பாலூட்டி, நீராட்டி, பாராட்டி, ஆலங்காட்டி, மைதீட்டி, ஆபரணம் பூட்டி, தொட்டிலில் வைத்துத் தாலாட்டி அருமையாக வளர்க்கும் செயலில் மகிழ்ச்சியோடு ஈடுபட்டார்.

ஸ்ரீ ராமன் பிறந்த பொழுது தசரதன் அடைந்த மகிழ்ச்சி போன்றும், ஸ்ரீ கிருஷ்ணன் பிறந்தபொழுது வசுதேவன் அடைந்த மகிழ்ச்சி போன்றும், தமாலும் ஜிஜ்ஜாபீபியும் அக்குழந்தையைப் பெற்றதனால் மகிழ்ச்சி அடைந்தார்கள். அக்குழந்தைக்குப் பெயர் சூட்டும் விழா ஒன்று நடாத்தினார்கள். அக்குழந்தைக்குக் கபீர் என்னும் பெயர் வைத்தார்கள். பெயர் சூட்டும் விழாவில் பந்துக்களுக்கும் அதிதிகளுக்கும் விருந்து படைத்துக் களிப்புற்று இருந்தார்கள்.

குழந்தை வளர்ந்து விளையாட்டுப் பருவத்தை எய்தியது. குழந்தை விளையாட்டிலே தெய்வ மணம் கமழ்ந்தது. குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது. முன்பு சுகரின் பேரழகைக் கண்டு அவரை மயக்க முடியாது போன அரம்பையானவள் தன் இச்சையை நிறைவேற்றிக் கொள்வதற்காகக் கபீர் பிறந்த குலத்திலேயே தானும் வந்து பிறந்தாள். கண்டோர் மயங்கும் படியான பேரழகுடன் அவள் வளர்ந்து வந்தாள். அக்கன்னியின் அழகைப் பார்த்த தமாலும், ஜிஜ்ஜாபீபியும் தங்கள் மகனுக்கேற்ற மனையாட்டி அவளே என்று தீர்மானித்தவர்களாக அப்பெண்ணின் பெற்றோர்களைக் கண்டு தங்கள் மகனுக்கு மணம் செய்து கொடுக்குமாறு கேட்டுக் கொண்டார்கள். கபீரின் அழகைக் கண்ட அப்பெண்ணின் பெற்றோர்களும் உள்ளம் களிகூர்ந்து அதற்கு இசைந்தனர். எனவே கபீருக்கு மணம் நிச்சயமாயிற்று.

தங்கள் குல முறைப்படி மணம் செய்வ

தற்கு முன்பு கபீருக்குச் சுன்னத்துச் செய்யத் தீர்மானம் செய்து அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்கள். அம் மதச் சடங்கைச் செய்து முடிப்பதற்காகக் காஜி முதலான சகலரையும் வரவழைத்திருந்தார்கள். மதச் சடங்கைச் செய்யும் காஜி என்பவர் சுன்னத்துச் செய்ய வேண்டுமென்று கபீரிடம் சொல்ல, கபீர் அக்கொடிய செயலுக்குச் சம்மதம் கொடுக்க மறுத்தார். குல மரபுப்படி இச்சடங்கைச் செய்து முடிக்க வேண்டுமென்று குலகுரு கூறினர். அதனுல் என்ன பயன் உண்டாகிறது என்று கபீர் கேட்டார். அதன் மூலம் பரிசுத்தம் ஏற்படுகிறது என்று குலகுரு கூறினர். அப்படியானுல் பெண்கள் எப்படிப் பரிசுத்தமாகிருர்கள் என்று கபீர் கேட்டார். பெண்கள் மந்திரோபதேசத்தால் பரிசுத்தமடைகிருர்கள் என்று குலகுரு கூறினர். மந்திரோபதேசத்தால் ஆடவன் பரிசுத்தமாகமாட்டானு? என்று கபீர் கேட்டார். ஆடவன் சுன்னத்து மூலம்தான் பரிசுத்தமாக வேண்டும் என்று நம் கடவுள் விதித்திருக்கிருர் என்ருர் குலகுரு. அது கடவுளின் ஆணை என்ருல் அவர் அசுத்தமானதைத் தோற்றுவித்திருக்க வேண்டியதே இல்லை. அவர் தொடர்ந்து அசுத்தமானதைச் சிருஷ்டித்துக்கொண்டே இருக்கிருர் என்பது பொருந்தாது. எனவே அது கடவுளுடைய ஆணை அன்று என்ருர் கபீர். நம் மத மரபுப்படி சுன்னத்துச் செய்துகொள்ளல் வேண்டும். இது ஒரு மரபேயன்றி இதில் பிரயோஜனம் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை என்ருர் காஜி. பிரயோஜனம் இல்லாத காரியத்துக்கு நான் ஏன் உட்படுதல் வேண்டும்? மேலும் அஞ்ஞானத்தில் உள்ளவர்கள் தெய்வத்தைக் குறித்துத் தியானம் செய்தால் பயனடைவார்கள். சுன்னத்துச் செய்வதால் யாது பயன்? எனவே இந்தச் சடங்கை ஒதுக்கிவிட்டு ஞான மார்க்கத்துக்குரியதைப் போதியுங்கள் என்ருர் கபீர். கபீரின் பேச்சு மற்றவர்களைத் திடுக்கிடச் செய்தது. கபீர் பேசிய சாதுர்ய வசனங்களைக் கேட்டு காஜி என்பவர் "ஞானமார்க்கத்தை அறிந்துகொள்வதற்கு முன்பு அனுசரிக்கவேண்டிய மூன்று முறைகளை விளக்கினர். ஷரீகத் என்பது சரியையாகும். தரகத் என்பது கிரியையாகும். அகீகத் என்பது யோகமாகும். இம்மூன்று முறைகளிலும் தேர்ந்த பிறகுதான் மாரிபத் என்கின்ற ஞானமார்க்கத்தை அனுசரிப்பதற்கு அவன் தகுதி உடையவனுகின்ருன். மேற்கூறிய மூன்று படிகளுள் முதற்படியாகிய ஷரீகத் என்பதை அறியாத சிறு குழந்தையாகிய நீ மாரிபத் என்கின்ற இறுதி மார்க்கத்தைப்பற்றிக் கேட்கின்ருய்? அதை உனக்கு விளக்குவதால் நீ என்ன பயன் அடையப்போகின்ருய்?" என்ருர்.

"ஞான மார்க்கத்தை அறிந்துகொள்வதால் ஜனன மரணம், அஹங்காரம், அஞ்ஞானம், துன்பம், சிற்றின்பம், ஆசாபாசம், பயம் ஆகிய சிற்றியல்புகளைக் கடந்து அகண்ட பரிபூரணச் சச்சிதானந்தமாகவும், நித்திய நிர்மலப் பொருளாகவும், சுயப்பிரகாசமாகவும் விளங்கும் பிரம்மத்தை உணர்ந்து சதா காலமும் ஆனந்த வாரியில் மூழ்கி இருக்கலாம்" என்ருர் கபீர். "இச்சிறுவன் தர்மங்களை முற்றும் அறிந்தவனுக இருக்கின்ருன். நாம் என்ன சொன்னுலும் இவன் சுன்னத்துச் செய்துகொள்ள மாட்டான். நான் என் இருப்பிடத்திற்குச் செல்கின்றேன். பெற்ருேர்களாகிய நீங்கள் இவனைச் சுன்னத்துச் செய்துகொள்வதற்குச் சம்மதிக்கச் செய்து என்னை அழையுங்கள்" என்று கபீரின் பெற்ருேர்களைப் பார்த்து காஜி கூறிவிட்டுத் தம் இருப்பிடம் சென்று விட்டார். குல முறைப்படி சுன்னத்துச் செய்து கொள்ளும்படி கபீரைப் பெற்ருேர்கள் கேட்டுக் கொண்டார்கள். கபீர் சம்மதிக்கவில்லை. தந்தையார் கோபித்துக்கொண்டார். தந்தையாருடைய கோபத்திலிருந்து தப்பித்துக்கொள்வதற்காகக் கபீர் வீட்டைவிட்டு வெளியே சென்று தலைமறைவாக இருந்தார். தாய் கபீரைத் தேடிக் கண்டுபிடித்து அழைத்து வந்தார். தந்தையார் கபீரை வஸ்திரம் நெய்யும்படி நெய்தல் தொழிலில் அமர்த்தினர். கபீரும் குற்றமற்ற நெசவுத் தொழிலைச் செய்து வரலானர்.

(தொடரும்)

# ஆத்ம போதம்

( திரு. V. S. நரசிம்மன் )

आत्मन्येवाखिलं दृश्यं प्रविलाप्य धिया सुधीः ।
भावयेदेकमात्मानं निर्मलाकाशवत्सदा ॥

सुधीः (ஸுதீ:) சிறந்த அறிவை உடையவன் अखिलं दृश्यं (அகிலம் த்ருச்யம்) காணப்படும் அனைத்தையும் धिया (தியா) புத்தியினால் आत्मनि एव (ஆத்மனி ஏவ) ஆத்மாவில் प्रविलाप्य (ப்ரவிலாப்ய) ஐக்கியம் அடையுமாறு செய்து सदा (ஸதா) எக்கணமும் निर्मल आकाशवत् (நிர்மல ஆகாசவத்) மாசற்ற வெட்டவெளி போல் एकं आत्मानं (ஏகம் ஆத்மானம்) ஒன்றாகிய ஆத்மனை भावयेत् (பாவயேத்) தியானிக்கவேண்டும்.

சிறந்த அறிவை உடையவன் தன் புத்தியினால் காணப்படும் காட்சியை ஆத்மனில் ஐக்கியப்படுத்தி ஆகாசம் போன்று நிர்மலமாக உள்ள ஒரே பரம்பொருளை என்றும் தியானிக்க வேண்டும்.

காணப்படுவது ஸத்தியமன்று; காண்பதுவே ஸத்தியம். த்ருச்யம்-பாம்பு, அஸத்; அதிஷ்டானம்-கயிறு, ஸத். 'த்ருக் ஏவ ஸத்தியம்' காண்பது எதுவோ அதுவே மெய்ப்பொருள் என்று த்ருக்-த்ருச்ய விவேகம் உணர்த்துகின்றது. த்ருச்ய வஸ்துவை ஆத்மனில் ஒன்றுபடுத்த வேண்டும். 'கயிறு இன்றேல் பாம்பு இல்லை' என்பது போல் ஆத்மா இன்றேல் காட்சி இல்லை. அப்படிச் செய்வதற்கு அந்தக்கரணம் பரிசுத்தமாக இருக்க வேண்டியது இன்றியமையாதது. ஆகவே 'ஸுதீ:' என்றார். 'அகிலம் த்ருச்யம்' என்ற தொடரைப் "பார்க்குமிடம் எங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்தமே" என்ற தாயுமானவரின் அனுபவ வாக்கியத்தோடு ஒப்பிடலாம். 'ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம—இவை அனைத்தும் பிரம்மமே' என்ற வாக்கியமும் இதே கருத்தை வெளியிடுகின்றது.

பரந்த, எல்லையற்ற, பிரிவுகளற்ற (அகண்ட, அனந்த) பரம்பொருளை மனதில் பாவிக்க ஆகாயத்தையும், கடலையும் உவமையாகக் கூறுவர். ராஜாஜீ அவர்கள் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது சுவாமி விவேகானந்தர் விடுதியைப் பார்வையிட வந்தார். 'ஸ்ரீ கிருஷ்ணனின் நிறம் நீலமாக இருப்பதின் தத்துவம் யாது?' என்று விவேகானந்தர் கேட்டார். "எல்லையற்ற ஆகாசமும் பரந்த கடலும் நீலநிறமாக உள்ளன. அகண்டப் பொருளின் உண்மையை உணர்த்த பரம்பொருளாகிய ஸ்ரீ கிருஷ்ணனும் நீலநிறத்தோடு காட்சி அளிக்கின்றார்" என்று ராஜாஜீ பதில் தந்தார்.

நிர்மல ஆகாசம்-மாசுகள் அற்ற வெட்டவெளி. பாரதத்தில் சரத் காலத்தில் பூரண நிலவு பிரகாசத்துடன் திகழும். வானில் அப்போது மேகங்களே தென்படாது. அத்தகைய நிர்மல ஆகாசத்தைப் போன்றது ஆத்மன் என்ற பாவனையில் திளைக்கவேண்டும். தூய அன்னையார் ஸ்ரீசாரதாதேவி இறைவனிடம் பிரார்த்தனை செய்யும்போது 'நிலாவில் கூட சிறிது அழுக்கு இருக்கும். அந்த அழுக்கையும் அகற்றி, தூய்மையே உருவெடுத்த நிலையில் எனது மனதை வைத்திருங்கள்" என்று வேண்டினார்.

रूपवर्णादिकं सर्वं विहाय परमार्थवित् ।
परिपूर्णचिदानन्द स्वरूपेणावतिष्ठते ॥

परमार्थवित् (பரமார்த்தவித்) பரம்பொருளை அறிந்தவன் रूप वर्णादिकं सर्वं (ரூப வர்ணாதிகம் ஸர்வம்) உருவம், நிறம் அனைத்தையும் विहाय (விஹாய) விலக்கிவிட்டு परिपूर्ण (பரிபூர்ண) பரிபூரண चिदानन्द (சிதாநந்த) சிதானந்தமாகிய स्वरूपेण (ஸ்வரூபேண) தனது வடிவத்தில் अवतिष्ठते (அவதிஷ்டதே) நிறைந்து இருப்பான்.

"பரம் பொருளை அறிந்தவன் உருவம், நிறம் ஆகிய அனைத்தையும் விலக்கிவிட்டுப் பரிபூரண சிதானந்தம் ஆகிய தனது ஸ்வரூபததிலே நிலைத்து இருப்பான்."

தோற்றம், நிறம் இவை நம் அனைவராலும் காணப்படுகின்றன. ஆயினும் நமக்கு அவற்றின் ஆதாரமான சச்சிதானந்த அம்சம் புலப்படுவதில்லை. ஆத்ம ஞானி உலகைப் பார்க்கும்போது நாம, ரூபத்தை மட்டுமல்

லாது அவற்றின் ஆதாரத்தையும் காண்கின்ருன். 'நாம, ரூபம்' மாயையின் அம்சம். எனவே அவற்றைக் களையவேண்டும் என்பதை 'விஹாய' என்ற சொல் உணர்த்துகிறது. பாசியை அகற்றித் தெள்ளிய நீரைக் காண்பது போன்று நம்மால் காணப்படுபவை மட்டும் அல்லாது, 'நான்' என்ற எண்ணத்திற்கு இலக்காக அமையும் தேகம், மனம், புத்தி, அகங்காரம் அனைத்தும் நாம ரூபங்களே.

மாயை தோன்றும் காலமெல்லாம் அதனை அகற்றித்தனது உண்மையான ஸ்வரூபத்தில் நிலைத்தல் வேண்டும். 'விஹாய' என்பதை அதனின்று விலகி இருத்தல் என்று கொண்டால்,

**யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்**

என்ற குறளின் கருத்துடன் ஒப்பு நோக்கலாம். பற்றற்ற தன்மை இதற்குத் துணை புரிகின்றது. ஜகத் நாம ரூபம்; அதை உண்மையெனக் கருதுவது அஞ்ஞானம்; அது அசைகின்ற நிழற்படத்தை உண்மை என்று எண்ணுதல் போல் ஆகும். எனவே தோற்றத்தில் மனதைச் செலுத்தாது, சைதன்ய சொரூபத்தில் திளைக்கவேண்டும். மனம் தியானத்தால் எதன் பின்னே தறிகெட்டு ஓடுகின்றது எனக் கண்டு, அதற்குக் காரணமாக இலங்கும் மாயை சொரூபத்தைத் துறக்கவேண்டும். இது எதிர்மறைப் (நெகடிவ்) பயிற்சி. மற்று ஆத்ம சொரூபத்தில் நிலைத்து இருப்பது உடன்பாட்டு முறை (பாசிடிவ்) பயிற்சி ஆகின்றது.

ज्ञातृ ज्ञान ज्ञेय भेदः परे नात्मनि विद्यते ।
चिदानन्दैक रूपत्वाद्दीप्यते स्वयमेव तत् ॥

परे आत्मनि (பரே ஆத்மனி) பரம்பொருளாகிய ஆத்மனில் ज्ञातृ, ज्ञान, ज्ञेय भेदः (ஞாத்ரு, ஞான, ஞேய பேத:) அறிபவன், அறிவு, அறிவது என்ற வேற்றுமைகள் न विद्यते (ந வித்யதே) இல்லை. तत् (தத்) அந்த ஆத்மா चिदानन्द एक रूपत्वात् (சிதாநந்த ஏக ரூபத்வாத்) சிதானந்தமாக, ஒன்ருக இருப்பதால் स्वयमेव (ஸ்வயமேவ) தானே दीप्यते (தீப்யதே) பிரகாசிக்கின்றது.

"அறிபவன், அறிவு, அறியும் முறை என்ற பேதங்கள் ஆத்மாவில் இல்லை. ஸ்வயம் பிரகாசமாக, சச்சிதானந்தமாக, ஏகமாக அது மிளிர்கின்றது."

திரிபுடி (மூன்று என்ற பேதம்), த்வந்த்வம் (இரண்டு என்ற பேதம்) இவை ஏதோ ஒரு வகையில் வியவஹாரத்தில் காணப்படுகின்றன. திரிபுடியை, காண்போன், காட்சி, காணப்படுபொருள் என்றும், அறிவோன், அறிவு, அறியப்படுபொருள் என்றும் கூறலாம். ஞாதுரு, ஞானம், ஞேயம் என்றும் அச்சொல்லை விளக்கலாம். இன்பம் துன்பம், உடைமை வறுமை, நன்மை தீமை முதலியவைகள் துவந்த்வங்கள் எனப்படுகின்றன. இவை எல்லாம் மாயா காரியத்தோடு கூடிய பிரபஞ்சத்தில் இடம் பெற்றிருக்கின்றன. பிறவாத, மூவாத, இறவாத, சாஸ்வத சத் வடிவமாகவுள்ள துரியத்துக்கும் எட்டாத அதித நிலையில் உள்ள அகண்ட சச்சிதானந்தமாகிய ஆத்மாவில் அப்பேதங்கள் யாவும் முடிவுறுகின்றன. ஆத்மா நித்தியவஸ்து; எண்ணத்துக்கும் எட்டாத மோன நிலையில் பரமாத்மாவுடன் ஜீவாத்மா இரண்டறக் கலக்கிறது. அந்நிலையில் மனம் மாய்ந்து போகிறது. அகங்காரம் அழிந்துபோகிறது. தித்திக்கும் பிரம்மானந்தம் ஒன்றே எஞ்சி இருக்கிறது. அந்நிலையில் திரிபுடிக்கும், துவந்த்வத்துக்கும் இடமில்லை. திரிபுடியும், த்வந்த்வமும் எழாத நிலையே ஏக ஸ்வரூபமாகிய ஆத்ம நிலை, அத்வைத சித்தி நிலை. 'தியானத்தில் மகிழ்ச்சியாக இருந்தேன்' என்று கூறுவதும் திரிபுடி நிலையே. தனக்கு இயல்பாக, சகஜமாக எந்த நிலை உள்ளதோ அதில் நிலைத்து இருப்பதே சாதகனின் லக்ஷியமாக இருக்கவேண்டும். அத்தகைய ஸ்வரூப நிலையைப் பல சுலோகங்களில் ஆசாரியர் குறிப்பிட்டுள்ளார். 'சிதானந்தம், ஏகம்' என்ற ஸ்வரூப லக்ஷணம் அடிக்கடி பயன்படுத்தப்படுவதை நாம் காணலாம். ஒரு பொருள்தான் உண்டு. அது ஏகம் எனப்படுகிறது. அது ஆனந்தமயமாக விருக்கிறது. ஆனந்தமாக இருப்பதைத் தானே அறிந்து கொண்டிருக்கிறது. எனவே அதன் சொரூபம் "சிதானந்தம் ஏகம்" என்று சொல்லப்படுகிறது.

# ஸத் ஸம்பாஷணை

கேள்வி: (340) கல்கத்தா நகரிலே கவனிப்பாரற்றுத் திரிந்து கொண்டிருந்த சிறுவன் ஒருவனைப் பக்தர் ஒருவர் தம் வீட்டுக்கு அழைத்துவந்து வேலைக்காரனாக வைத்திருந்தார். அச்சிறுவனிடமிருந்த நல்ல இயல்புகளை ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் கவனித்தார். அவனைத் தம்மிடம் தந்துவிடும்படி பக்தரை அவர் கேட்டார். பக்தரும் அதற்கு இசைந்தார். அதன் விளைவாக அச்சிறுவன் நாளடைவில் பரமஹம்சர் தேர்ந்தெடுத்த துறவியர் கூட்டத்தில் அத்புதானந்தர் என்னும் நிறை ஞானியானார்.

இச்செயலுக்கு நேர்மாறாகத் துரோணாச்சாரியரிடம் வந்த ஏகலைவ்யன் என்னும் இளைஞன் ஒருவனை அவர் சிஷ்யனாக ஏற்றுக்கொள்ள மறுத்தார். பிறகு குருபக்தியின் வாயிலாக அவன் பெற்றிருந்த வில்வித்தைத் திறமையை வலக்கைக் கட்டை விரலை வெட்டிப் பாழ்படுத்தினார். துரோணாச்சாரியார் இப்படிச்செய்தது நியாயமா?

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் தம்போக்கில் பண்படுத்திய மக்கள்கூட்டத்தில் துறவியர்கள் தலைசிறந்தவர்களாகத் திகழ்ந்தார்கள். அக்கூட்டத்தில் ஒருவர் சுவாமி அத்புதானந்தர். பரமஹம்சதேவரோடு தொடர்புஏற்படாதிருந்திருந்தால் அவருடைய வாழ்வு அனர்த்தமாய்ப் போயிருந்திருக்கும். தெய்வாதீனமாக அவர் உய்வடைந்தார். பரமஹம்சதேவரை அணுகியவர்களெல்லாரும் அவரவர் தரத்திற்கேற்ப நல்வாழ்வு எய்தினர். ஆதலால் நரயக்ஞத்தில் இக்காலத்திய சான்றோர்களுக்கிடையில் பரமஹம்சதேவர் தலை சிறந்தவராகத் திகழ்ந்து கொண்டிருக்கின்றார் என்று நாம் பகரலாம்.

இனி, துரோணாச்சாரியரின் செயலை ஆராய்ந்து பார்ப்போம். அவருடைய சிஷ்யனாக விரும்பிய ஏகலைவ்யனிடம் துரோணாச்சாரியர் பகர்ந்ததாவது: ''தனுர் வேதம் அல்லது வில்வித்தையில் யுத்த சம்பந்தமான பகுதியில் நான் சிறிது தீவிரப்பயிற்சி பெற்றவன். அக்கலையை ராஜகுமாரர்களுக்கிடையில் நான் எடுத்து வழங்கி வருகிறேன். யுத்தம் ஒன்று நேரிட்டால் என் மாணுக்கராயிருக்கும் சிஷ்யர்கள் அதில் ஈடுபடுவார்கள். ஆனால் வேடனாயிருந்து வரும் உனக்கும் யுத்தத்துக்கும் எந்தவிதமான சம்பந்தமுமில்லை. ஆகையினால் ஏகலைவ்யா! உன்னை நான் சிஷ்யனாக ஏற்றுக்கொள்ள மாட்டேன்.''

ஏகலைவ்யன்: ''ஐயனே! அப்படி இருந்தாலும் நான் தங்களைக் குருவாக வைத்துக்கொண்டு என்போக்கில் வில்வித்தையில் பயிற்சிபெற்று வந்தால் அதில் தங்களுக்கு ஆட்சேபம் ஏதேனும் உள்ளதா?''

துரோணாச்சாரியர்: ''ஆட்சேபம் இல்லை.''

இந்தச் சம்பாஷணை முதல் சந்திப்பில் ஏற்பட்டது. ஏகலைவ்யன் துரோணாச்சாரியரைப் போன்று விக்கிரகம் ஒன்றைச் செய்து அமைத்துக்கொண்டு அதன் வாயிலாகக் குருபக்தி பழகினான். அதன் விளைவாக வில்வித்தையில் அவன் நிபுணன் ஆனான். ஒருபோக்கில் அர்ஜுனனுடைய வில்வித்தைத் திறமையை அவன் மீறியவனானான். இதையறிந்த துரோணர் ஏகலைவ்யனைச் சந்தித்து நடந்தது யாது? என்று வினவினார். தான் பூண்டிருந்த குருபக்தியை அவன் எடுத்து விளக்கினான். ''நான் கேட்கும் குரு தட்சணையைத் தருவாயா?'' என்றார் துரோணர்.

''என் உயிரையே தாங்கள் கேட்டாலும் தட்சணையாக மகிழ்வுடன் எடுத்துத் தருவேன். என்னை நீங்கள் சிஷ்யனாக அங்கீகரித்தது ஒன்றே வாழ்வில் நான் பெற்றுள்ள பெரும் பேறுகும்'' என்றான் ஏகலைவ்யன்.

துரோணாச்சாரியர்: ''உன் உயிரை நான் விரும்பவில்லை. உன் வலக்கையிலுள்ள கட்டை விரலைத் துண்டித்துக் குருதட்சணையாக எனக்குக் கொடுப்பாயாக.''

ஏகலைவ்யன்: ''குருதேவா, இதோ தந்துவிடுகிறேன்.'' அம்பு ஒன்றை வானத்தில் அவன் எய்தான். அது வளைந்துவந்து அவன் கட்டைவிரலைத் துண்டித்தது. அர்ஜுனனாலுங்கூட இத்தகைய செயலைச் செய்யமுடியாது. ஆனால் இச்செயலின் விளைவாக மேற்கொண்டு இதுபோன்ற செயற்கரிய செய

லைச்செய்து சாதிக்கும் திறமையை இழந்தான் அந்த இளைஞன்.

அர்ஜுனன்: "குருதேவா, தங்கள் செயல் மூலம் அவன் பெற்றுள்ள கலை முழுதையும் பாழ்படுத்திவிட்டீர்கள்."

துரோணர்: "அர்ஜுனா, அதுவன்று விஷயம். ஏகலைவ்யன் பெற்றுள்ள வில்வித்தைத் திறமை எவ்விதத்திலும் இனி வரப்போகும் பாரதப்போருக்கு உதவாது. ஏனென்றால் ஏகலைவ்யனுக்கும் அந்த யுத்தத்துக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை. தன் தொழிலுக்கேற்ற அளவு வில்வித்தைத் திறமை அவனிடத்து எஞ்சி நிற்கிறது. அவனுக்கு அது போதுமானது. அவனுடைய கட்டைவிரலை வாங்கியதன் விளைவாக உலகுக்கு நான் ஓர் அரிய பாடத்தைப் புகட்டியுள்ளேன். ஏகலைவ்யன் படைத்துள்ள குருபக்தி இருக்குமானால் குருவின் துணையின்றியே எக்கலையிலும் எந்தச் சிஷ்யனும் மேலோங்கலாம்."

இந்தச் சம்பவத்தை ஆராய்ந்து பார்க்குமிடத்துத் துரோணாச்சாரியார் பண்ணியது துரோகம் அன்று. ஏகலைவ்யனை அவர் குரு பக்திக்குச் சிறந்த ஓர் எடுத்துக்காட்டாக வைத்தது அவனுக்குச் செய்துள்ள பெரிய உபகாரமாகும். மேற்கொண்டு அச்செயலின் வாயிலாகக் குருபக்தியின் சிறப்பையும் சாத்தியத்தையும் அவர் உலகுக்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

**கேள்வி: (341)** ***போரில் உற்றார் உறவினரைக் கொன்று ஆட்சியைப் பிடிப்பது பிச்சை எடுப்பதை விடக் கேவலம் என்கிறான் அர்ஜுனன். 'பகவதி பிக்ஷாந் தேஹி' என்பது கேவலமா?***

அர்ஜுனன் பகர்ந்தது சன்னியாச தர்மத்தை இகழ்ந்ததாகாது. சன்னியாச தர்மம் பிக்ஷை ஏற்பது. வறியன் ஒருவனுடைய தர்மம் ஐயம் ஏற்பது. ஐயம் ஏற்பது இகழ்ச்சி. பிக்ஷை ஏற்பது பாராட்டுதற்குரிய பெரிய செயல். ராஜ்யத்தை முற்றத் துறந்த புத்தர் பெம்மான் பிக்ஷாந் தேஹி என்று பகர்ந்துகொண்டு வீதியில் போகிறார். அவரைத் தொடர்ந்து யாசகன் ஒருவன் தனக்கு உணவு தரவேண்டும் என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டு வீதியில் போகிறான். பிக்ஷாந் தேஹி என்று துறவி ஒருவர் கேட்பது ஞானத்தின் விளைவு. உணவை வறியன் ஒருவன் கெஞ்சிக் கேட்பது அக்ஞானத்தின் விளைவு. வறியனுடைய செயலினும் கடைப்பட்டதாகிறது உற்றார் உறவினரைக் கொன்று ராஜ்யத்தைப் பெறுவது என்பது அர்ஜுனன் செய்த ஆட்சேபம்.

வெளித்தோற்றத்துக்கு ஐயம் ஏற்பதும் பிக்ஷை கேட்பதும் ஒன்றாகத் தென்படுகின்றன. மற்று, பிரபஞ்ச அதீதத்துக்கு அப்பால் சென்ற ஞானி அல்லது அப்பால் செல்ல முயலுகின்ற முமுக்ஷு ஒருவனுடைய செயல் பிக்ஷை எடுப்பது. உலகத்தவர்கள் பக்தியுடன் துறவியர்களுக்குப் பிக்ஷை படைக்கின்றனர். அதே உலகத்தவர் இரக்கத்துடன் யாசகம் கேட்பவனுக்கு ஐயம் இடுகின்றனர். ஆதலால் செயலுக்கு அடிப்படையாகவுள்ள மனப்பான்மையைஅறிந்து கொள்ளுதல் சிறந்தது. புறச்செயலைப் பார்த்து எம்மனிதனையும் நாம் மதிப்புப் போடலாகாது.

**கேள்வி: (342)** ***வைணவர்களின் நாமம், சைவர்களின் திருநீறு—இவற்றின் கருத்தென்ன?***

வைஷ்ணவர்கள் போடும் நாமத்துக்குத் திருமண் அணிதல் என்று பெயர். சைவர்கள் பூசும் திருநீறும் வைஷ்ணவர்கள் அணியும் திருமண்ணும் லட்சியத்தில் ஒன்று. நீறு என்பது சாம்பல். நிலையற்ற உடல் ஒருநாள் சாம்பலாகப்போகும் அல்லது மண்ணோடு மண்ணாகும் என்னும் கோட்பாட்டை இந்த இரண்டு சின்னங்களும் விளக்குகின்றன. உயிரினும் மிக்கது உடலிலே உறையும் ஆத்மா. இந்த ஆத்மனைப் பரமனுக்கு உரியதாக்க வேண்டுமென்பது சமயங்களின் குறிக்கோள். ஆத்ம சாதகன் இந்தக் குறிக்கோளை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். சின்னத்துக்கு முதன்மை தந்து மத வேற்றுமையையும் வெறுப்பையும் வளர்க்கலாகாது. மதங்கள் பலப்பல இருப்பது அவசியம். தனக்கு விருப்பமான சின்னத்தைப் பயன்படுத்தி ஆத்ம சாதகன் பக்தியை வளர்க்கவேண்டும்.

# ஸ்ரீமத் பாகவதம்

( சுவாமி ஸதானந்தர் )

கடவுளைத் தியானிப்பதன் மூலம் சான்றோர் கர்மபந்தங்களையெல்லாம் ஒழிக்கிறார்கள். க்ஷேத்திரங்களுக்கு யாத்திரைபோவது, அன்றாட பூஜை செய்வது, ஆலய தர்சனம் செய்வது, சத் கதாகாலக்ஷேபம் கேட்பது போன்ற நற்காரியங்களால் மக்களிடத்துக் கடவுள் பக்தி ஓங்கி வளர்கிறது. மக்கள் ஆழ்ந்து தர்மானுஷ்டானத்தில் ஈடுபடுகிறார்கள். இங்ஙனம் அவர்களுடைய ஆத்ம சாதனம் தீவிரமடைகிறது. சத் விஷயங்களைக் கேட்பதில் விருப்பம் ஏற்பட்டால், மனதில் குடிகொண்டிருக்கிற தீய சம்ஸ்காரங்கள் தாமே மறைய ஆரம்பிக்கின்றன. காமம், சுயநலம், உலகப்பற்று இவைகள் மனிதனைக் கீழ்மைப்படுத்துகின்றன. இவைகளினின்று மீளுதற்கு உபாயம் பக்த ரக்ஷகன் ஆகிய கடவுள் மனதின் உள்ளே புகுவது ஒன்றுதான். தீய சம்ஸ்காரங்கள் குறையக் குறையத்தான் கடவுட்பற்று அதிகரிக்கும். அருள்தாகம் அதிகமாக ஆகிவிட்டால்தாமஸ ராஜஸ குணங்களால் உருவாகிற தீய பிரவிருத்திகள் மனதை மாசுபடுத்தமாட்டா. இங்ஙனம் மனது பரிசுத்தமடைந்து கடவுள் பக்தி பெருகிவிட்டால் ஆத்ம சாதகன் கடவுள் அருளுக்குப் பாத்திரமாகிறான். இவ்வுலகின் நிலையாமையையும், இதன் வெளி அலங்காரத்தையும், பொய்யான கவர்ச்சியையும் நன்கு புரிந்துகொண்ட சான்றோர் மிக்க மகிழ்ச்சியோடு கடவுள் நாட்டத்தில் முழுமனதோடு ஈடுபட்டுவிடுகிறார்கள். கடவுள் ஒருவரே வேண்டத்தக்கவர். கடவுள் ஒருவரே அறியத்தக்கவர். முக்குணங்கள் ஜீவர்களைச் செயலில் தூண்டுகின்றன. சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவனாகவும், சம்ஹார மூர்த்தியாகிய ஹரனாகவும் தோன்றியிருப்பவர் ஸ்ரீ ஹரியே. ஹரியானவர் சத்வ குண மூர்த்தி. எல்லா ஆத்ம நலன்களும் சத்வகுணத்திலிருந்து வருகின்றன. ஜடப் பொருளாகிய மரக்கட்டையைவிடப் புகை சூக்ஷ்மமானது, மேலானது. புகையைவிட நெருப்பு இன்னும் மேலானது. ஏனெனில் நெருப்பு உபயோகமானது, புனிதமானது, உயிரளிப்பது. இதே போன்று தமோ குணத்தைவிட ரஜோகுணம் மேலானது. ரஜோகுணத்தைவிடச் சத்வகுணம் மேலானது. ஏனென்றால் சத்வகுண பிரவிருத்தியால் தான் ஆத்மசாதனங்கள் பயனுடையவை ஆகின்றன. கடவுளைத் தூர இருந்து சத்வ குணம் காட்டித் தருகின்றது. ஆகவே சத்வகுண மூர்த்தியும் புனிதமே வடிவெடுத்தவருமான ஸ்ரீ ஹரியைச் சான்றோர் வணங்குகின்றனர். பித்ருக்களையும், தேவர்களையும், சிறு தேவதைகளையும் புறக்கணித்துவிட்டுப் பகவான் ஸ்ரீமந் நாராயண மூர்த்தியை வழிபடுங்கள். அவருடைய அவதாரங்களுள் சிறந்த மூர்த்திகளாகிய ஸ்ரீராமனையும் ஸ்ரீ கிருஷ்ணனையும் வழிபடுங்கள். அப்படி வழிபடும்போது மற்ற ஈச்வர மூர்த்திகளிடத்து எத்தகைய துவேஷ மனப்பான்மையும் உண்டாகலாகாது. கடவுள் வழிபாட்டின் முக்கிய நோக்கம் உலகப் பொருள், சௌபாக்கியம், ஆயுள், சொர்க்கப் பிராப்தி பெறுவது அன்று; கடவுளுடன் இரண்டறக் கலத்தல், சொரூபஞானமடைதல், பந்தங்கள் யாவினின்றும் விடுபடுதலே நோக்கம். சாஸ்திரங்கள் மீண்டும் மீண்டும் புகட்டுவது, வற்புறுத்துவது இதுவே. நல்ல மனோபாவம் இருந்தால் தான் ஆத்மசாதனம் சிறந்த பலனைத் தரும்.

பரப்பிரம்மம், நிர்க்குண பிரம்மம், ஆதி நாராயணன் குணம், குறி, கிரியை, பாகுபாடு, பேதம் ஆகிய ஏதும் அற்ற சுத்த அத்வைதப் பொருளாக இருக்கிறார். கனவற்ற ஆழ்ந்த உறக்கத்தில் நாம் எந்த நிலையில் இருக்கிறோமோ அந்நிலை போன்றது அது. மிக உயர்ந்த அந்நிலை மேலாம் பிரகிருதி எனப்படுகிறது. அந்நிலையிலிருக்கின்றவர் சொரூபானந்தத்தில் தன்னில் தானாக ஆத்மராமனாக இருக்கிறார். இறைவனிடத்து ஒரு ஸ்புரணம், பூரிப்பு, ஓர் எண்ணம் தோன்றிற்று. அவர் பலவாக, இந்தப் பஞ்ச பூதங்களாக, பல்வேறு லக்ஷணங்கள்

கொண்ட பிரபஞ்சப்பொருள்களாக, ஜீவர்களாக வடிவெடுத்தார். இது அவருடைய கீழான பிரகிருதி எனப்படுகிறது. கடல் மேல் பரப்பில் ஓட்டம், அலே, நுரை என்று வடிவம், நாமம், செயல் உடையதாக இருக்கின்றது. அதன் கீழ்ப்பகுதியோ மேல் பகுதிக்கு ஆதாரமாக இருக்கிறது. கடவுள் இரண்டுபட்டுவிடவில்லே. அவ்யக்தம் (தோன்ருநிலே), வியக்தம் (தோற்றத்துக்கு வந்த நிலே) என்பன இப்பிரபஞ்சத்தைப் பற்றிய உண்மை, விளக்கம் ஆகும். கடவுள் என்றுமே இல்லாமற் போனதில்லே. அவர் என்றும் உள்ள சத்பொருள். இப்பிரபஞ்சம் கடவுளின் அலகிலா விளேயாட்டு எனப்படுகிறது. பல்பில் சிவப்புக் காகிதத்தைச் சுற்றினுல் சிவப்பு வெளிச்சம் வீசுகிறது. பச்சைக் காகிதத்தைச் சுற்றினுல் வெளிச்சம் பச்சையாகத் தென்படுகிறது. அது தன் இயல்பில் நிறமற்றது. அங்ஙனம் ஆதிநாராயணன் பேதமற்றவர், பரிசுத்த நிலேயில் உள்ளவர், அவருடைய ஸத் சித் ஆனந்த சொருபமே இப்பிரபஞ்சமாக, அதன்மகிமையாக, அறிவாக, ஆனந்தமாக மிளிர்ந்து கொண்டுள்ளது. ஆகவே தன்னிடத்திருந்து உண்டான வலேயிலே சிலந்தி தானே வசிப்பது, விளேயாடுவது போன்று கடவுள் இப்பிரபஞ்சத்தில் விளேயாடுகிருர். இது அவருடைய விபூதி எனப்படுகிறது. அவர் அலகிலா விளேயாட்டுடையான், ஆனந்தக் கூத்தன், ஆனந்தக் கிருஷ்ணன். ஆகையால் பகவானேயே தியானிப்போமாக.

அத்தியாயம் 3

சூதர் மேலும் சொன்னுர்: "முனிவர்களே, சிருஷ்டிக்கவேண்டும் என்கிற விருப்பம் கொண்டு ஆதிநாராயணன் விராட் புருஷ வடிவமெடுத்தார். அவ்விராட் புருஷரிடத்திருந்து மஹத், அகங்காரம் வடிவெடுத்தன. இவற்றிலிருந்து தன்மாத்திரைகள்,ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, மனம் ஆகிய தத்துவங்கள் வடிவெடுத்தன. பத்ம கல்பத்தில் (கல்பம் என்பது ஒரு நீண்டகால அளவையின் பெயர். அக்கல்பங்களுள் ஒன்றுக்குப் பத்ம கல்பம் என்றுபெயர்) அப்புருஷோத்தமர் தன்னில்தானுய் யோகநித்திரையில் சயனித்திருந்தார். அப்பொழுது பெரிய குளம்போன்ற அவர் கொப்பூழிலிருந்து ஒரு தாமரை மலர் தோன்றியது. அதில் பிரம்மதேவர் தோன்றினுர். அவர் இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டித்தார். ஆகவே ஸ்தூலமாயுள்ள இப்பிரபஞ்சத்துக்குத் தாயாகவும் தந்தையாகவும் மூலப்பொருளாகவும் அண்டத்தின் பீஜமாகவும் இருப்பவர் அப்பரமாத்மனே என்பதை யோகிகள் அறிந்து கொள்கின்றனர். ஆகவே அவர்கள் இப்பிரபஞ்சத்தை எண்ணற்ற தலேகளும், எண்ணற்ற கை கால்களும், கணக்கற்ற கண்களும், காதுகளும் கொண்ட திவ்ய மங்கள விசுவரூபமாகத் தரிசிக்கின்றனர். கடவுளுடைய மேலான சொருபங்களாகத் தேவதைகளேயும் தேவர்களேயும் காண்பது போன்றே இப்பிரபஞ்சத்திலுள்ள ஜடம், சேதனம், ஸ்தாவரம், சிற்றுயிர், மானுடர் ஆகிய யாவரையும் ஞானிகள் தங்கள் ஞானக்கண்ணுல் சர்வம் வாசுதேவமயமாகக் காண்கின்றனர்.

ஆதியில் பரமபுருஷனுக இருந்த பகவான் சிருஷ்டியில் விருப்பம் கொண்டவரானுர். அவர் இளம் பிரம்மச்சாரியாக வடிவெடுத்து கௌமாரனுகக் கடும் தவ விரத அனுஷ்டானங்களே மேற்கொண்டார். பிறகு அவர் வராஹமாக வடிவெடுத்துக் கடலில் மூழ்கிக் கிடந்த இப்பூமியை உயர வெளிக்கொணர்ந்தார். மூன்ருவதாக அவர்தேவரிஷி நாரதராக அவதரித்தார். அவர் வைஷ்ணவ தந்த்ரம்-வைஷ்ணவ ஸம்பிரதாயம்—பக்தி மார்க்கத்தைப் பரப்பினுர். இக்கலியுகத்துக்கு ஏற்றது பக்தி மார்க்கமே. கர்மபந்தங்களே, உலகப் பற்றை எளிதில் வெல்ல வல்லது பக்தி மார்க்கம். நான்காவதாக அவர் நர நாராயணர்களாக வடிவெடுத்தார். அவர்கள் நிறைந்த புலனடக்கமும், கடும்தவமும் இயற்றினுர்கள். ஐந்தாவதாக அவர் பேரறிஞரும் வல்லவர்களுள் வல்லவரான கபில முனிவராகத் தோன்றினுர். அசுரி என்கிற உத்தமருக்கு மறைந்து பின்னணிக்குப் போயிருந்த சாங்கிய தத்துவங்களே அவர் உபதேசித்தார். இப்பிரபஞ்ச நடைமுறைக்கு மூலகாரணமாக இலங்குகிற

தத்துவங்கள் ஆகும் அவை. தத்தாத்ரேயர் அந்த ஆதிபகவனது ஆருவது தோற்றமாகும். அத்ரி மஹரிஷியின் விருப்பப்படி பகவான் அவர் திருக்குமாரனுக அவதரித்தார். இந்த அவதாரத்தில் ஆத்ம தத்துவத்தை அவர் அலார்க்கா, பிரஹ்லாதன் ஆகியோருக்கு உபதேசித்தருளினர். ஏழாவதாகப் பகவான் ஆகுதிக்கும் ருசிக்கும் மகவாகப் பிறந்தார். அப்போது அவருடைய பெயர் யக்ஞர். யக்ஞர் தம் மக்களுடன் சுவயம்புவ மன்வந்தரத்தில் இவ்வுலகை எல்லாம் ஆண்டார். ஆண்டவன் தம் எட்டாவது தோற்றத்தில் அக்னிதரனின் புத்திரனுக்கும் மேருதேவிக்கும் மகனுகப் பிறந்தார். அவர் பெயர் ரிஷவர். அவர் எல்லா ஸம்பிரதாயக்காரர்களாலும் மிகச் சிரேஷ்டமானதாகக் கருதப்படும் பரமஹம்ச மார்க்கத்தைப் போதித்தார்.

"சிரேஷ்டர்களே, பகவான் ஸ்ரீமந் நாராயணன் ரிஷிகள் பிரார்த்தனைக்கு இணங்கிப் பிரிது என்ற அரசனுகத் தம் ஒன்பதாவது அவதாரத்தில் தோன்றினர். இந்த அவதாரத்தில் பகவானுனவர் பூமியிலிருந்து மதிப்பு மிக்க உயர்ந்த நவரத்தினங்களையும் பலன் நிறைந்த ஸ்தாவர வர்க்கங்களையும் பயனுக்குக் கொண்டுவந்தார். பகவான் தம் பத்தாவது அவதாரமாக சக்ஷுஷ கல்பத்தில் பூமியானது ஜலப்பிரளயத்தில் மூழ்கியிருந்தபோது மிகப் பெரிய மீனுக அவதரித்து இவ்வுலகையும் வைவஸ்வத மனுவையும் காப்பாற்றி அருளினர்.அதனுல் இவ்வுலகமும் இதன் ஜீவராசிகளும் மறுபடியும் தோற்றத்துக்கு வந்தன. பகவான் தம் பதினென்ருவது அவதாரமாக ஆமையாகத் தோன்றினர். அசுரர்களும் தேவர்களும் பாற்கடலை மந்திர பர்வதத்தை மத்தாகக்கொண்டு கடைந்தபோது அப்பர்வதம் மூழ்கிவிடாமல் தம் முதுகில் தாங்கியருளினர். பகவான் தம் பன்னிரண்டாவது அவதாரமாகத் தன்வந்திரியாகத் தோன்றினர். அவர் கையில் அமிர்த கலசத்தை ஏந்தினவராகக் கடலிலிருந்து வெளிப்பட்டார். தம் பதின்மூன்ருவது அவதாரமாகப் பகவான் மோஹினியாக வடிவெடுத்தார். தம் மோஹனமான வடிவத்தில் மயங்கிப்போன அசுரர்களை ஒதுக்கிவிட்டுத் தேவர்களுக்கு அமிர்தத்தை விநியோகம் பண்ணினர். தம் பதினுன்காவது அவதாரமாக நரசிம்மமாக வடிவமெடுத்தார். மிகவும் கர்வம் கொண்ட அசுரனுகிய ஹிரண்யகசிபுவைத் தம் தொடையில் போட்டுக் கோரைப் புல்லைக் கிழிப்பது போன்று தம் நகங்களால் கிழித்து அழித்தார்.

"தம் பதினைந்தாவது அவதாரமாக வாமனனுகத் தோன்றினர். பலிச்சக்கரவர்த்தி செய்த யாகசாலையில் பிரசன்னமானுர். பலியின் ஆதிக்கத்தினின்று மூன்று உலகங்களையும் தந்திரமாக மீட்பதற்காக மூன்று காலடி பூமியை யாசித்தார். பகவான் பதினுருவதாகப் பரசுராமனுக அவதரித்தார். க்ஷத்திரியர்களின்பால் மிகவும் கோபமடைந்த பரசுராமர் இருபத்தொரு தலைமுறையைச் சேர்ந்த க்ஷத்திரியர்களை அழித்தார். பதினேழாவது அவதாரமாகப் பராசரருக்கும் சத்தியவதிக்கும் மகனுகப் பகவான் வியாசராகத் தோன்றினர். மக்களின் மந்த புத்தியையும் ஞாபக சக்தியற்ற நிலையையும் பார்த்து இரக்கம் கொண்டு வேதங்களைப் பிரித்து வகைப் படுத்தினர்; காப்பாற்றினர். பதினெட்டாவதாகப் பகவான் சக்கரவர்த்தி திருக்குமாரனுக அவதரித்தார். உலகில் தர்ம ஸ்தாபனத்தின் பொருட்டு, நல்லவர்களைக் காத்தல் பொருட்டு அசுரசம்ஹாரத்தின் பொருட்டு அசாதாரணமான காரியங்களைச் செய்தார். பத்தொன்பதாவது அவதாரமாகப் பகவான் பூபாரத்தைத் துடைப்பதற்காகப் பலராமனுகவும் ஸ்ரீ கிருஷ்ணனுகவும் அவதரித்தார். இப்போது கலியுகம் வந்துவிட்டபடியால் கடவுள் இனி, கயைக்குப் பக்கத்தில் அஞ்சனைக்கு மகனுகப் புத்தராகத் தோன்றி வருவார். அவர் தீயவைகளை ஒதுக்கித் தள்ளி நல்ல பிரவிருத்திகளை, நல்வாழ்வை, சுயப்பிரயத்தனத்தை ஊக்குவிப்பார். இந்தக் கலியுகத்தின் கடைசியில் அரசர்கள் எல்லாரும் தீவட்டிக் கொள்ளைக் காரர்களைப் போல ஆகிவிடும் நாளில் பகவான் கல்கி அவதாரம் எடுப்பார்.

# குறிப்புகள்

**முருகன் வழிபாடும் சமபந்தி போஜனமும்**

தமிழர் திருநாளாம் பொங்கலன்று திருச்சிக்கு அருகிலுள்ள திருவானைக்கா என்னும் ஊரில் உள்ள ஹரிஜன சேரியில் அமைந்துள்ள அம்மன் கோவில் முன் ஞான ரத முருகன் ஆராதனை நிகழ்ந்தது. சேரிவாழ் மக்களுக்கு இந்நிகழ்ச்சிபற்றி முன்கூட்டியே தெரிவித்து ஒத்துழைக்கக் கோரிக்கை விடப்பட்டிருந்தது. அதற்கொப்ப அவர்கள் தம் வீட்டையும் வீட்டின் முன்புறத்தையும் தூய்மைப்படுத்தி, தெருவைக் கூட்டிப் பெருக்கி நீர் தெளித்து, கோலமிட்டு அலங்கரித்து வைத்திருந்தனர்.

நிகழ்ச்சி மாலை 6-30 மணி அளவில் ஆரம்பமானது. முருகப் பெருமான் விக்ரகம் அம்மன் கோவில் முன் வைக்கப்பட்டது. முருகப் பெருமானுடைய நாமங்கள் சிலவற்றை ஒருவர் முன் மொழிய அவைகளைத் திரும்பச் சேரிவாழ் மக்கள் கூறினர். குழந்தைகள், இளைஞர்கள், ஆடவர், பெண்டிர் அனைவரும் ஒன்று சேர்ந்து பக்தியோடு கூறியது பாராட்டத் தக்கதாக இருந்தது.

முருகப்பெருமானுக்கு அபிஷேகம் செய்யும் நிகழ்ச்சியில் சேரிவாழ் மக்கள் தாமே தம் கையால் பால், பன்னீர், இளநீர், விபூதி முதலியவைகொண்டு அபிஷேகம் செய்து வழிபாடு நிகழ்த்த அனுமதிக்கப்பட்டது. தாமே அபிஷேகம் செய்வதில் அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கோர் எல்லையில்லை. இவ்வித வழிபாடு அவர்களுக்குப் புத்தம் புதியதாம். அர்ச்சகர் அபிஷேகம் செய்வதைப் பார்த்துக்கொண்டிருப்பதைவிடத் தாமே அபிஷேகம் செய்வதானது மிகச் சிறந்த முறையாகும். இதில் மன ஈடுபாடும், தெய்விக இன்பமும் கிட்டுவது தெளிவாகத் தெரிகிறது. அபிஷேக நிகழ்ச்சிக்குப் பின் அர்ச்சனை நிகழ்ந்தது. ஒருவர் நாமங்களை முதலில் கூற ஏனையோர் பின்மொழிந்தனர். இவ்விதமாக வழிபாடு முடிவுற்றது.

சுமார் ஐந்நூறுக்கு மேற்பட்ட சேரிவாழ் மக்களுக்குப் புளிச்சாதம், தயிர்ச்சாதம் இரவு உணவாக வழங்கப்பட்டன. அவர்கள் வரிசையாக அமர்ந்து உணவு உண்டனர். திருச்சியிலிருந்து வந்திருந்த அன்பர்கள் சிலரும் அவர்களோடு அமர்ந்து உணவு அருந்தினர். ஜாதி பேதம் ஆங்குப் பாராட்டப் படாமை போற்றத்தக்கதாயிருந்தது. ஹிந்து ஹரிஜன மக்களை, ஹிந்து மேல்ஜாதியினர் புறக்கணிக்கிறார்கள் என்ற காரணம் காட்டி, அதைப் பெரிதாக்கிச் சுயநலத்தை மனதிற்கொண்டு புறமதத்தினர் அவர்களைத் தம் மதத்திற்கு ஈர்த்து வருகிறார்கள். மதம் மாற்றுவதற்காக வெளிநாட்டுப் பணத்தையும் அவர்கள் தாராளமாகச் செலவிடுகின்றார்கள். மதமாற்றத்தால் பல விபரீதமான விளைவுகள் ஏற்படுகின்றன. எனவே, ஹரிஜனங்களை உயர்ஜாதியினர் வெறுக்கவில்லை, ஒதுக்கவில்லை என்பதை உணர்த்தவும், ஹிந்து மதத்தில் ஆழ்ந்த நம்பிக்கையூட்டவும் இதுபோன்ற நிகழ்ச்சிகளை ஆங்காங்கே அவ்வப்பொழுது நடாத்தி வருவது சிறந்தது. இது ஒரு சீரிய சமூகத் தொண்டும் ஆகும். மேலும் தற்போது இது போன்று நடத்தப்படாவிடில் ஹரிஜனங்கள் பெருவாரியாகப் பிற மதத்திற்குப் போய்விடுவார்கள். இதனால் பெருங்கேடு எதிர்காலத்தில் நேர்ந்துவிடும். ஆகவே நல்லெண்ணங்கொண்டவர்கள் இப்பணியில் ஈடுபடுவார்களாக.

புத்தாநத்தம் என்னும் ஊரானது திருச்சி ஜில்லா மணப்பாறையிலிருந்து துவரங்குறிச்சிக்குச் செல்லும் சாலையில் அமைந்துள்ளது. அவ்வூரில் அண்மையில் ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் பிணக்குநேர்ந்து கலவரம் ஏற்பட்டது. கலவரத்திற்குரிய காரணம் யாதெனில் புத்தாநத்தம் நெடுஞ்சாலையில் ஓரிடத்தில் மசூதி அமைந்துள்ளது. அம்மசூதி வழியாக ஹிந்துக்கள் வாத்தியத்துடன் ஊர்வலமாகச் செல்வதற்கு முஸ்லிம்கள் தடை விதித்தார்கள். பொதுச் சாலை வழியாக வாத்தியத்துடன் செல்வதைத் தடுக்க முஸ்லிம்களுக்கு உரிமை இல்லை என வாதிட்டனர் ஹிந்துக்கள். மதச் சார்பற்ற அரசாங்கமான இந்நாட்டில் ஒவ்

வொரு மதத்தாரும் இணக்கமாகப்போவதே முறை. யாரும் தனி உரிமை பாராட்ட லாகாது. எனவே முஸ்லீம்கள் மசூதி வழியாகச் செல்லும் ஹிந்துக்களின் திரு மண, தெய்விக ஊர்வலத்தைத் தடை செய் வது சட்டரீதியானதன்று. முஸ்லீம்களின் பிடிவாதத்தால் ஹிந்துக்கள் கிளர்ந்தெழுந் தனர். ஒருவரை ஒருவர் இவ்விஷயமாகத் தாக்கிக்கொண்டனர். கலவரத்தை நிறுத்த போலீஸார் ஈடுபட்டனர். கலவரத்தில் ஹிந்து முதியவர் தாக்கப்பட்டுக் கால மானார்.

அடுத்து, ஞானரதம் ஊர்வலமாக வர, புத்தாநத்த ஹிந்து மக்கள் இரண்டு மாதத் திற்கு முன்பே ஏற்பாடு பெரிதாகச் செய் திருந்தனர். முஸ்லீம்களின் எதிர் கோஷத் தால் ஞானரதம் புத்தாநத்தம் வழியாக வரத் தடை செய்யப்பட்டது. இது ஹிந்துக் களுக்கு மிகவும் எரிச்சலை உண்டுபண்ணிவிட் டது. இடைவிடாது கலவரம் நடைபெறத் தொடங்கியது. மாவட்ட ஆட்சித் தலைவ ரும் போலீசாரும் சமரஸம் செய்ய முயன்று ஒரு சில நிபந்தனைகளுடன் சமரஸம் ஏற் பட்டது. ஞான ரதம், திருமுருகன் உருவச் சிலையுடன் மசூதி வழியாக, தொழுகை நேரம் நீங்கலாக மற்றநேரங்களில் ஊாவல மாகச் செல்ல அனுமதிக்கப்பட்டது.

மாட்டுப் பொங்கலன்று திருச்சியிலி ருந்து ஞானரதம் துவரங்குறிச்சிக்குக் காலை 8½ மணிஅளவில் போய்ச் சேர்ந்தது. திருச்சி யிலிருந்து சிலரும், ஆங்குள்ள மக்கள் சில ரும் துவரங்குறிச்சியில் ஒன்று கூடினர். துவ ரங்குறிச்சியிலுள்ள அன்பர் ஒருவர் வீட்டில் காலை உணவு வெளியூரிலிருந்து வந்தவர்க ளுக்கு ஏற்பாடாகி இருந்தது. துவரங்குறிச் சியிலிருந்து சுமார் 8 கி. மீ. தூரத்திலுள்ள ஓர் ஊரில் திரு முருகப்பெருமானுடைய விக்ரகத்தை வைத்து மலரால் அலங்காரம் செய்யப்பட்டு, கற்பூர ஆரததிசெய்யப்பட்ட பின் புத்தாநத்தம் நோக்கி ரதம் நெடுஞ் சாலையில் இழுத்துச் செல்லப்பட்டது. தேர் புறப்பட்ட நேரம் காலை 11-30 மணி ஆகும். தேரைத் தொடர்ந்து அவ்வட்டாரத்தில் உள்ள பதினெட்டுக் கிராமங்களைச் சேர்ந்த ஹிந்துக்கள் சுமார் நாற்பதினுயிரம் பேர் திரண்டு ஊர்வலமாகப் பற்பல வாத்திய முழக்கங்களுடன், வாண வேடிக்கையுடன் சென்றது கண்கொள்ளாக் காட்சியாகும். நெடுஞ்சாலையில் இடமில்லாது பக்கத்து வய லிலும் புகுந்து முருகப்பெருமானுடைய நாமத்தைக் கூறிக்கொண்டு மக்கள் சென்ற தைக் காணும்போது ஒருவிதப் புத்துணர்ச்சி தானுகவே யாருக்கும் ஏற்பட்டிருக்கும் என் பதை மறுக்க முடியாது. எவ்விதக் கலவரமு மின்றி முறையாக ஊர்வலம் புத்தாநத்தம் மசூதி வழியாகச் சென்றபொழுது நேரம் பகல் 12-00 மணி ஆய்விட்டது. அந்நேரம் முஸ்லீம்களின் தொழுகை நேரமாதலால் ஒப்பந்தப்படி தொழுகை முடிந்தான பின் தான் தேர்மசூதியைக் கடக்கவேண்டுமெனப் போலீசார் தடை விதித்தனர். தேரை இழுத்து வந்தவர்கள் இதற்கு ஒத்துக் கொண்டு நின்றனர்.ஆயினும் அப்போதைய சூழ்நிலையில் ஏற்கனவே நெடுஞ்சாலையில் ஊர்வலம் காரணமாக ஒரு மணி நேரம் சாலையில் எவ்விதப் பேருந்துகளும் போக முடியாதபடி தடைபட்டிருந்தன. மேலும் இப்பெருங்கூட்டத்தைப் பொறுமையாகக் காத்திருக்க வைப்பது எவ்விதத்திலும் சாத் தியப்படாது என்றுணர்ந்த போலீஸ் அதி காரிகள்முஸ்லீம்களுக்கு நிலைமையை விளக்கி இது சமயத்தில் மசூதியைக் கடந்துசெல்ல இடையூறு ஏதும் விளைவிக்க வேண்டா மெனக் கேட்டுக் கொண்டனர். அவர்கள் அனுமதிக்கவே தேரும் மசூதியைக் கடந்து ஊர்வலத்தோடு வெற்றி முழக்கத்துடன் சென்று இடையப்பட்டி என்னும் ஊரை அடைந்தது.

இடையப்பட்டியில் கிராமக் கோவிலின் முன் முருகப் பெருமானின் விக்கிரகத்தை வைத்துப் பால், தயிர், பஞ்சாமிர்தம், இள நீர், பன்னீர், விபூதி இவைகளைக்கொண்டு வந்திருந்த ஆடவர், மகளிர் தத்தம் கையா லேயே அபிஷேகம் செய்து வழிபாடு நிகழ்த் தினர். எங்கும் ஆனந்தக் களிப்பு மிதந்து கொண்டிருந்தது. முருகனுடைய புகழைப் பாடிக்கொண்டே இருந்தார்கள். ஆரா தனை முடிவடைய இரண்டு மணிநேரம் ஆய்

விட்டது. அபிஷேகம் முடிந்தானதும் யாவரையும் அர்ச்சனை கூறும்படி செய்து வழிபாடு முடிக்கப்பட்டுப் பிரசாதம் வழங்கப் பட்டது.

இந்நிகழ்ச்சியால் ஹிந்துக்கள் பெருமிதம் எய்தினர். காரணம் சொந்த நாட்டிலேயே நடத்த முடியாத குறைபாடு நீங்கியது என்பதே. ஹிந்துக்கள் ஒன்று திரண்டால் ஆகாதது ஏதுமுண்டோ? ஹிந்து மதத்தில், சமூக அமைப்புக்காகப் பல்வேறு ஜாதிகள் உள்ளன என்பது உண்மை. ஆனுல் மதம் என்று எடுத்துக்கொள்ளுமிடத்து ஆங்குப் பேதமில்லை. தெய்வ வழிபாட்டில் பேதமில்லை. பேதம் பாராட்டுவது பேதைமையே யாகும்.

மாலை 5-00 மணி அளவில் பொதுக் கூட்டம் ஒன்று நிகழ்ந்தது. நெடுந்தொலைவிலிருந்து நடையாகவே வந்திருந்த பலர் வழிபாடு முடிந்ததும் தத்தம் ஊருக்குத் திரும்பியவர்கள் போக, ஏனையோர் பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டனர். விஷயம் தெரிந்த பற்பல பேச்சாளர்கள் தத்தம் கருத்தை எடுத்துரைத்தனர். பொதுவாக வலியுறுத்திக் கூறப்பட்ட கருத்துக்களாவன: (1) தற்போது ஜாதி வேறுபாடு பாராட்டாது ஹிந்துக்கள் யாவரும் ஒன்று சேரவேண்டும். நாம் அனைவரும் ஹிந்துக்கள். இந்தியா, பாரதம் நம் நாடு. நம்மிடத்தில் ஹிந்து மதாபிமானமும் தேசாபிமானமும் மிகவும் தேவை. இவற்றை வளர்க்க எல்லா வகையிலும் முயற்சி செய்யப்படல் வேண்டும். (2) மதமாற்றம் செய்ய அனுமதிக்கக் கூடாது. எக்காரணம் பற்றியும் ஹிந்துக்கள் மதம் மாறலாகாது. நம்முள் பிணக்குகள் நேர்ந்தாலும் நாமே ஒன்று கூடி நிலைமையைச் சரியாக்கி விடவேண்டுமே யல்லாது, பிற மதம் மாறுவது என்னும் பெருங்கேட்டுக்கு இடம் தரலாகாது. மதமாற்றம் எதிர்காலத்தில் எல்லா மட்டத்திலும் பெருங்கேடு ஏற்படுத்திவிடும். எனவே, சமூக நலங்கருதி நாம் இதில் மிகக் கவனம் செலுத்த வேண்டும். இவ்விஷயம் தற்போது உடனடியாகக் கவனிக்கப்பட்தக்கதாக இருக்கிறது. (3) அரசியல்வாதிகள் தற்போது மிகவும் சுயநல நோக்கங்கொண்டவர்களாக இருக்கிறுர்கள். ஹிந்து அரசியல்வாதிகளும் ஹிந்துமத அபிமானம், தேசாபிமானம் இன்றி, தாம் தோன்றித்தனமாகக் காரியம் செய்வதைத் தடை செய்ய ஒரே வழி, ஹிந்து மதாபிமானம் கொண்டவர்களுக்கு மட்டுமே ஹிந்துக்கள் தேர்தலில் வாக்குக்கள் வழங்க வேண்டும் என்பதில் உறுதியாக நிற்பதே யாகும்.

மாலை 6-45 மணிக்குப் பொதுக்கூட்டம் இனிது முடிவுற்றது. எல்லாரும் பெருங் காரியம் ஒன்றைச் செய்து சாதித்த மன நிறைவுடன் திரும்பினர்.

கும்பாபிஷேக விழா

மக்களைப் பெரும் திரளாகக் கூட்டி அனைவரையும் தெய்வச் சிந்தனையில் ஈடுபடும்படி செய்வதற்குக் கும்பாபிஷேக விழா துணை செய்கிறது. கோயில் கோபுரங்களைப் புதுப்பித்து அல்லது புதிய கோயில் கட்டி கும்பாபிஷேக விழாச் செய்கின்றுர்கள். கோயில்களில் மூர்த்திப் பிரதிஷ்டை செய்தும் கும்பாபிஷேக விழா நடத்துவதும் உண்டு. கிரியா விசேஷங்களைப் பெருக்குவது கும்பாபிஷேக விழாவில் எங்கும் கையாளப்பட்டு வருகிறது. கிரியாவிசேஷங்களைப் பெருக்குவதன் மூலம் பொருள் செலவு அதிகரிக்கிறது. பொருளை வீண் விரயம் செய்யாது கிரியைகளைக் குறைத்து மனதைப் பகவான் மீது செலுத்திப் பக்திபூர்வமாகக் கும்பாபிஷேக விழா நடத்தும் முறை இராமநாதபுரம் மாவட்டத்தில் சிவகாசியில் அருள்மிகு ஸ்ரீ மாரியம்மன் கோவில் கும்பாபிஷேக விழாவில் கையாளப்பட்டது. குறைந்த பொருள் செலவில் மக்கள் யாவரும் பக்தி பூர்வமாகப் பங்கெடுக்கும் முறையில் 21-1-83 வெள்ளிக்கிழமையன்று ஆங்குக் கும்பாபிஷேக விழா நடைபெற்றது.

20—1—83 காலை 5-30 மணிக்கு இந்தியாவிலுள்ள புண்ணிய தீர்த்தங்களைக் கும்பங்களில் நிரப்பி ஆவாஹனம் செய்யப் பட்டது. காலை 6-00 மணிக்கு "ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம், ஆதிசக்தி மஹாசக்தி பராசக்தி ஓம்" என்ற ஜபயக்ஞம்

தொடங்கியது. அதில் அன்பர்களும் தாய்மார்களும் கலந்துகொண்டு கும்பத்தில் அருட் சக்தியை ஏற்றினுர்கள். கல்லூரி மாணவிகளும், மேல்நிலைப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி மாணவ மாணவிகளும் ஊக்கத்துடன் ஜபயக்ஞத்தில் கலந்துகொண்டார்கள். 20-1-83 காலை 6-00 மணிக்கு ஆரம்பித்த ஜபயக்ஞம் 21-1-83 காலை 5-00 மணிவரையிலும் இடைவிடாது நிகழ்ந்துகொண்டிருந்தது. இரவில் சுமார் ஐந்நூறு உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் கோவிலுக்குப் பக்கத்தில் தங்கியிருந்து முறை வைத்துக்கொண்டு ஒவ்வொருவரும் ஒருமணி நேரத்துக்குக் குறையாமல் சக்தி நாமத்தை ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் ஜபம் செய்தார்கள். ஆலயத்தின் கண் அருட்சக்தி ஓங்குவதற்கு ஜபயக்ஞத்தில் அனைவரும்பங்குகொண்டனர். இது கும்பாபிஷேகத்தின் சிறப்பு நிகழ்ச்சியாக இருந்தது. ஹோமகுண்டம் வளர்த்து ஏராளமான பொருள் செலவு செய்து ஒருசிலர் ஏனோ தானோ என்று மந்திரங்களை உச்சரிக்கும் சடங்கு அருட் சக்தியை வளர்த்துவிடும் என்று சொல்லமுடியாது. நூற்றுக்கணக்கான ஆண்களும் பெண்களும் சிறுவர்களும் சிறுமிகளும் பக்தி உணர்வுடன் ஜபயக்ஞத்தில் தங்கள் மனதை ஈடுபடுத்தியது ஆயலத்தின்கண் அருட்சக்தியை வளர்த்திருக்கும் என்பதில் ஐயம் இல்லை. இந்த ஜபயக்ஞத்தில் பொருள் செலவு எதுவுமில்லை. மக்கள் தங்கள் உள்ளத்தைப் பக்தி பூர்வமாகப் பகவானிடம் கொடுத்தல் என்கின்ற செயல் நிகழ்ந்தது. அதன் விளைவாக ஆலயத்தின்கண் அருட்சக்தி வளர்ந்ததோடு மனம் பண்பட்டவர்களாக மக்கள் மாறி அமைந்தார்கள். 21-1-83 காலை 5-00 மணியிலிருந்து 'ஓம் ஐம் மஹா சக்த்யை ஸ்வாஹா' என்று ஒவ்வொருவரும் உச்சரித்து வில்வத்தை நெய்யில் தோய்த்து ஹோமகுண்டத்தில் சொரிந்து வைதிக முறைப்படி யக்ஞம் பக்தி பூர்வமாகச் செய்யப்பட்டது. மக்கள் ஒவ்வொருவரும் கும்பாபிஷேக யக்ஞத்தில் கலந்து கொண்டதாக உணர்ந்தார்கள். யாரோ சிலர் மந்திரம் ஜபித்து ஹோமாக்னியில் வில்வம் போடுவது என்னும் உரிமையை எல்லார்க்கும் உரியதாக்கியது இந்த யக்ஞத்தின் சிறப்பு ஆகும். ஒரு சிலர் மந்திரம் உச்சரிக்க மற்றவர்கள் வேடிக்கை பார்த்துக்கொண்டு வீண் அரட்டை அடிப்பது பரிகாசத்துக்குரிய சடங்காகும். யாவரும் மந்திரத்தை உச்சரித்து அக்னியில் வில்வம் போட்டுப் பங்குகொள்வது மனதைப் பண்படுத்தும் நிகழ்ச்சியாகும். அனைவருடைய மனதும் அம்பிகையின் மந்திரத்தை உச்சரிப்பதில் ஈடுபட்டு அக்னியில் நெய்யில் தோய்த்த வில்வ தலத்தைப் போடும் நிகழ்ச்சி ஒரு மணி நேரம் உருக்கமான முறையில் நிகழ்ந்தது. இதற்கிடையில் கணேச ஹோமமும் ஒரு சிலர் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக நிகழ்ந்தது. அதில் பொருள் செலவு அதிகம். ஒரு சிலர் மந்திரம் கூற மற்றவர்கள் வேடிக்கை பார்க்கும் கண்காட்சியாக அது அமைந்திருந்தது. சடங்குக்கும் பக்தி பூர்வமான செயலுக்கும் உள்ள வேற்றுமையைக் கும்பாபிஷேக விழாவில் கலந்துகொண்டவர்கள் நன்கு அறிந்திருப்பார்கள். அனைவருடைய உள்ளத்திலும் பக்தி உணர்வை ஊட்டுவது கும்பாபிஷேக விழாவின் இலட்சியமாக அமையவேண்டும். வீண் செலவு செய்து பொருளை விரயம் செய்வது கும்பாபிஷேக நிகழ்ச்சியாக அமையலாகாது என்பதை ஆங்கு நிகழ்ந்த கும்பாபிஷேக நிகழ்ச்சி விளக்குவதாக இருந்தது.

21-1-83 அதிகாலை 5-45 மணிக்கு அருட்சக்தி ஏற்றப்பட்ட புண்ணிய தீர்த்தங்கள் நிறைந்த கும்பங்களைக் கோபுரத்துக்கு எடுத்துச் சென்று குடமுழுக்குச் செய்த நிகழ்ச்சியை ஆயிரக்கணக்கான மக்கள் புனித உணர்வோடு பார்த்துத் தங்களைப் புனிதப்படுத்திக் கொண்டார்கள். அந்நிகழ்ச்சிக்குப் பிறகு புதிதாகப் பிரதிஷ்டை செய்த அம்பிகைக்கும், மற்றும் அவ்வாலயத்திலுள்ள எல்லா மூர்த்திகளுக்கும் அபிஷேக ஆராதனை நிகழ்ந்தது. அபிஷேக ஆராதனைக்குப் பிறகு ஊர்ப் பொதுமக்கள் அம்பிகையை, மலர்சாத்தி வழிபடும் நிகழ்ச்சி காலை 8-00 மணிக்கு ஆரம்பித்து

இரவு 9-00 மணி வரையிலும் நிகழ்ந்து கொண்டிருந்தது. திரளான மக்கள் வரிசையாக மலர்சாத்தி வழிபட்டது மக்களுடைய உள்ளத்தில் மறைந்து கிடந்த பக்தியை வெளிப்படுத்தியது.

யாகம் அல்லது வேள்வி செய்வதின் நோக்கம் நம்மையும், நம்மிடத்திலுள்ள பொருளையும் தெய்வத்துக்குரியன ஆக்குவதாகும். 20-1-83 இரவு ஆலயத்திலுள்ள மூர்த்திகளைப் பிரதிஷ்டை செய்வதற்கு மூர்த்தியின் கீழ் விலையுயர்ந்த பொருள்களைக்கொண்டுவந்து மககள் வைத்து மூர்த்தியை அஷ்டபந்தனம் செய்தார்கள். நல்ல பொருளைத் தங்களுக்கென்று வைத்துக் கொள்ளாது தெய்வத்துக்குரியதாக்குவது மனதிலுள்ள பொருட்பற்றை ஒழிப்பதற்கு உபாயமாகிறது. நல்ல பொருளைத் தெய்வத்துக்கு ஒப்படைப்பது என்ற வேள்வியின் நோக்கத்தை அச்செயல் மூலம் நிறைவேற்றினர்கள். நாம ஜபம் சொல்லியதன் மூலமாகவும், மலர் சாத்தி வழிபட்டதன் மூலமாகவும் நல்ல மனப்பான்மையைத் தெய்வத்துக்குரியதாக்குதல் என்ற வேள்வியின் நோக்கத்தை நிறைவேற்றினர்கள். 21-1-83 கும்பாபிஷேகத்தன்று மாலை அம்பிகையின் மஹிமையைப்பற்றியும் கண்ணன் பெருமையைப் பற்றியும் சொற்பொழிவுகள் கேட்டதன் மூலம் நல்வாழ்வு என்ன என்பதைப்பற்றி மக்கள் தெரிந்து கொண்டார்கள். நல்வாழ்வைப் பற்றிய சம்ஸ்காரத்தைச் சொற்பொழிவைக் கேட்டு மனதில் வைத்துக்கொண்டதன் விளைவாக நல்வாழ்வுக்குத் தூண்டுதல் அவர்கள் மனதிலிருந்தே வந்துகொண்டிருக்கும். இங்ஙனம் மக்களை வேள்வியின் கண் தூண்டுகின்ற நிகழ்ச்சிகள் கும்பாபிஷேகத்தன்று நிகழ்ந்தன.

பொது மக்களிடையே பண்பாட்டை வளர்ப்பதற்கு இக்கும்பாபிஷேகம் போன்ற நிகழ்ச்சிகள் நிகழவேண்டும். மதக் கிரியைகளெல்லாம் பண்பாட்டை வளர்ப்பதற்கென்றே அமையவேண்டும். அப்பொழுது தான் மதக் கிரியைகளால் மக்கள் பயன் அடைவார்கள். வீண் பொருள்செலவு செய்து மதக்கிரியைகள் செய்வது ஆணவத்தையும், அஹங்காரத்தையும் வளர்க்கும். பொது மக்கள் பண்பட்டால்தான் நாடு சுபிட்சம் அடையமுடியும். எனவே பொது மக்களைப் பண்படுத்துகின்றபாங்கில் மதக்கிரியைகளை எல்லாம் செய்துவருவதுதான் நாம் இப்பொழுது நாட்டுக்குச் செய்யும் நல்லசேவையாகும். ஆலயங்களைத் துப்புரவாக வைத்துக் கொள்வதிலும் அமைதியான முறையில் ஆலய வழிபாடு செய்வதிலும் கருத்துச் செலுத்தாதவர்களாக மக்கள் இப்பொழுது இருந்து வருகிறார்கள். கற்றவர்களும், விஷயம் தெரிந்தவர்களும் மேற்கூறிய இரண்டு விஷயங்களிலும் பொதுமக்கள் கருத்தைச் செலுத்துமாறு தூண்டி வரவேண்டும். தாங்கள் முன் மாதிரியாக அவர்களுக்கு நடந்து காட்டவேண்டும். இனி நம் நாட்டில் மதக் கிரியைகளின் மூலமாக மக்கள் மனதைப் பண்படுத்தும் செயலைச் சிறப்பாக நடத்த முற்படுவோமாக.

---

## செய்திகள்

### நிகழ்பவை

*பிப்ரவரி 18ஆம் தேதி வெள்ளிக்கிழமை திருச்சி ஸ்ரீரங்கத்திலுள்ள காமாட்சி அம்மன் கோவிலில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் இரவு 6-30 மணியிலிருந்து 8-00 மணிவரையில் சிறு அந்தர்யோகம் நடத்துவார்கள்.*

*மார்ச் மாதம் 12ஆம் தேதி சனிக்கிழமை மஹாசிவராத்திரியாகும். அன்று விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் உபவாசமிருந்து இருபத்து நான்கு மணிநேரம் அகண்டநாம பஜனை செய்வார்கள்.*

*16—3—83 புதன்கிழமை ஸ்ரீ ராமகிருஷ்ணர் திதி பூஜையாகும். அன்று ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் இருபத்து நாலுமணிநேரம் அகண்ட நாம பஜனை செய்வார்கள். பகல் 11 மணிமுதல் 12 மணிவரை ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்களும், திருப்பராய்த்துறை விவேகானந்த உயர்நிலைப்பள்ளி மாணவ மாணவிகளும், திருப்பராய்த்துறை ஸ்ரீ விவேகானந்த ஆரம்பப்பள்ளி மாணவ மாணவிகளும் தபோவனத்தில் ஐக்கிய வணக்கம் செய்வார்கள்.*

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | பிரசார விலை ரூ. | 23-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 14-ம் பதிப்பு | ,, ... | 18-00 |
| மஹாபாரதம் | ,, ... | 7-00 |
| இராமாயணம் | ,, ... | 5-00 |
| ஸ்ரீ தாயுமானசுவாமி பாடல்கள் | ,, ... | 6-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ | ,, ... | 5-50 |
| தினசரி தியானம் | ,, ... | 4-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 9-00 |
| ஞானயோக விளக்கம் | ... | 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... | 8-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... | 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... | 5-50 |
| விவேகானந்த விவரணம் | ... | 4-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | ... | 3-50 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 3-00 |
| எதிர்கால இந்தியா | ... | 3-00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | ... | 3-00 |
| பஜனைப்பாடல்கள் | ... | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... | 2-50 |
| தாயுமானவர் இயற்றிய | | |
| கருணாகரக் கடவுள் | விரிவுரை ... | 3-50 |
| பரிபூரணானந்தம் | ஷை ... | 3-00 |
| சின்மயானந்த குரு | ஷை ... | 3-00 |
| ஆனந்தமானபரம் | ஷை ... | 3-00 |
| சுகவாரி | ஷை ... | 3-00 |
| மௌனகுரு வணக்கம் | ஷை ... | 3-00 |
| எங்குநிறைகின்றபொருள் | ஷை ... | 2-50 |
| பரசிவ வணக்கம் | ஷை ... | 1-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... | 2-50 |
| ஹரிச்சந்திரன் | (நாடகம்) ... | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் | ... | 1-75 |
| விரதவீரர் பீஷ்மர் | ஷை ... | 1-50 |
| விபீஷணன் சரணாகதி | ஷை ... | 1-50 |
| பரமஹம்சர் பாமாலை | ... | 1-50 |
| காயத்ரீ | ... | 1-50 |
| நன்மக்களைப் பெறுதல் | ... | 1-50 |
| அமரநாத யாத்திரை | ... | 1-25 |
| சந்நியாசி | ... | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... | 1-25 |
| இறைவணக்கம் | ... | 1-00 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... | 1-00 |
| இராவண தத்துவம் | ... | 1-00 |

| | | |
|---|---|---|
| வாலி மோட்சம் | (நாடகம்) ரூ. | 1-00 |
| தவப்புதல்வர்கள் | ,, ... | 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி | (நாடகம்) ... | 1-00 |
| தானவீரன் கர்ணன் | (நாடகம்) ... | 1-00 |
| மார்க்கண்டேயன் | (நாடகம்) ... | 1-00 |
| பிரஹ்லாதன் | (நாடகம்) ... | 1-00 |
| தபோபலன் | (நாடகம்) ... | 1-00 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் | ... | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவ மதமும் | ... | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... | 1-00 |
| *ஆத்ம சக்தி | ... | 1-00 |
| *ஆலய வழிபாடு | ... | 0-75 |
| *சிவதத்துவம் | ... | 0-70 |
| *மனிதனது நிஜசொருபம் | ... | 0-70 |
| தாயுமானவர் ஆலயத்தில் தத்துவ அமைப்பு | ... | 0-60 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... | 0-60 |
| *கணபதி | ... | 0-60 |
| *முருகக் கடவுள் | ... | 0-50 |
| கர்மகாண்டம்எது? ஞானகாண்டம்எது? | | 0-50 |
| வர்ணாச்ரம தர்மம் | ... | 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... | 0-30 |
| விவேகானந்தரின் வீர கர்ஜனை | ... | 0-30 |
| The Bhagavad Gita (11th Imp) | ... | 24-00 |
| Tirukkural ( with plastic cover ) | ... | 8-00 |
| The Indian National Education | ... | 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... | 8-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... | 5-00 |
| Daily Divine Digest (DELUXE) | ... | 6-00 |
| Daily Divine Digest (Ordinary) | ... | 4-00 |
| Ramayana | (with plastic cover) ... | 7-00 |
| Mahabharata | ,, ... | 6-00 |
| Sri Krishna-The Manifest Divinity | ,, ... | 6-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... | 4-00 |
| The Bhagavad Gita (Small Size) | ... | 4-00 |
| Siva Sahasranama Stotram | ... | 3-50 |
| Bheeshma The Superman | ... | 3-50 |
| Hinduism Hosts Christianity | ... | 3-00 |
| Holy Bible—In the Light of Vedanta | ... | 1-50 |
| Reminiscences of Master Mahashaya | ... | 1-50 |
| *Introducing the Gita | ... | 1-50 |
| The Garland of Paraaparam | ... | 1-50 |
| *Key to Higher Life | ... | 1-25 |
| *The Student | ... | 1-25 |
| TAT TVAM ASI *That Thou Art* IN Tayumana Swami | ... | 1-00 |
| *The Nursery School | ... | 1-00 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக கீதை, திருவாசகத்திற்கு ரூ. 5-00ம், மஞ்ஜரிக்கு ரூ. 1-80ம் மஹாபாரதத்திற்கு ரூ. 1-80ம் இராமாயணத்திற்கு ரூ. 1-60ம் தினசரி தியானத்திற்கு ரூ 1-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 3-00 முதல் ரூ. 5.00 வரையும் சேர்த்து அனுப்புங்கள். *இப்புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

## ஆண்டு சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு

தர்ம சக்கரத்தில் வரும் விஷயங்கள் செய்தித் தாள்களில் உள்ளவைபோன்று தாற்காலிகமானவைகளாக இல்லாமல் நிரந்தரமான தத்துவ ஆராய்ச்சியாக இருக்கின்றன. ஒரு வருடத்திற்கான தர்மசக்கர இதழ்களைப் பைண்டு செய்து வைத்துக்கொண்டால் அது ஒரு நல்ல புத்தகமாக அமையும். நாம் படிப்ப தற்கும் மற்றவர்களுக்குப் படிக்கத் தருவதற்கும் வசதியாக இருக்கும்.

தர்மசக்கரத்திற்குப் புதிய சந்தாதாரர்கள் எந்த மாதம் முதற்கொண்டும் சந்தாதாரர்களாகச் சேர்ந்து பயன்பெறலாம். அன்பர்கள் முயன்று பல புதிய சந்தாதாரர்களை அறிமுகப்படுத்தி அவர்களையும் ஆத்மீக வாழ்க்கையில் ஈடுபடச் செய்யக் கோருகிறோம்.

குறிப்பிட்ட அளவே இதழ்கள் அச்சாக்கப்படுவதால் கூடிய விரைவில் மாசி மாதம் புதுப்பித் துக் கொள்ள வேண்டிய பழைய சந்தாதாரர்களும் உடன் புதுப்பித்துக்கொண்டு மற்றும் பலரையும் புதிய சந்தாதாரர்களாக அறிமுகம் செய்யக் கோருகிறோம். ஆண்டு சந்தா 1—6—82 முதல் ரூ. 15-00 ஆகவும் சகாய சந்தா ரூ. 10-00 ஆகவும் உயர்த்தப்பட்டிருக்கிறது. சந்தா தொகையை அனுப்பும்போது மறவாமல் தங்கள் சந்தா எண்ணையும் குறிப்பிடக் கோருகிறோம்.

---

## ஹிந்து முன்னணி

ஹிந்து முன்னணி மாநிலத் தலைவர் திரு. தாணுலிங்க நாடார் (முன்னாள் எம். பி.) அவர்களும், மாநில அமைப்பாளர் திரு. இராம. கோபாலன் அவர்களும் மதமாற்றத் தடைச்சட்டம் கோரி தமிழ் நாட்டில் 53 நாட்கள் சுற்றுப்பயணம் செய்து பொதுக்கூட்டங்களில் பங்கேற்கிறார்கள்.

தீண்டாமையையும், ஜாதி மோதல்களையும் கைவிடத் தீவிரப் பிரச்சாரத்தை அவர்கள் நடாத்துவார்கள்.

**சுற்றுப்பயணத் திட்டம் வருமாறு:**

பிப்ரவரி மாதம் 16. மணப்பாறை 17. அறந்தாங்கி 18. திருவாரூர் 19. மாயூரம் 20. கும்பகோணம் 21. தஞ்சாவூர் 22. பெரம்பலூர் 23. திருச்சி 27. ஈரோடு 28. கோபிச்செட்டிபாளையம்.

மார்ச் மாதம் 1. திருப்பூர் 2. தாராபுரம் 3. கோவை 4. கூடலூர் 5. ஊட்டி 6. கூனூர் 10. தர்மபுரி 11. சேலம் 12. செங்கம் 13. குடியாத்தம் 25. பாலக்கோடு 26. கிருஷ்ணகிரி 27. திருவண்ணாமலை 28. வேலூர் 29. சிதம்பரம் 30. விழுப்புரம் 31. கடலூர்.

ஏப்ரல் மாதம் 1. பாண்டிச்சேரி 5. காஞ்சிபுரம் 6. வந்தவாசி 7. ஆற்காடு 8. அரக்கோணம், 9, 10, 11, & 12. சென்னை.

அன்பர்கள் தங்களால் இயன்ற உதவிகளை அவர்களுக்குச் செய்வார்களானால் அது ஒரு நல்ல தொண்டாக அமையும்.

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Saankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.